# ஸ்ரீ ராமாநுஜன் 158, 159.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 14 | 1962 பிப்ரவரி௴, மார்ச்சு௴<br>பிலவ-௵ மாசி-௴, பங்குனி௴ | ஸஞ்சிகை 2, 3. |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—48

ஆரா வமுதாழ்வா ராதரித்த பேறுகளை *
தாராமையாலே தளர்ந்துமிக *—தீராத
ஆசையுட னாற்றாமைபேசி யலமந்தான் *
மாசறுசீர் மாறனெம் மான்.

| | |
|---|---|
| எம்மான் | அஸ்மத்ஸ்வாமியும் |
| மாசு அறு சீர் | குற்றமற்ற திருக்குணங்களை யுடையவருமான |
| மாறன் | ஆழ்வார் |
| ஆதரித்த பேறுகளை | (திருக்குடந்தையில்) தாம் ஆசைப்பட்ட பேறுகளை |
| ஆராவமுதாழ்வார் தாராமையாலே | ஆராவமுதப்பெருமான் அருள் செய்யாமையாலே |
| மிக தளர்ந்து | மிகவும் நெஞ்சு சிதிலப்பட்டு |
| தீராத ஆசையுடன் | அநுபவத்தாலல்லது தீரமாட்டாத அபிநிவேசத்தாலே |
| ஆற்றாமை பேசி | தம்முடைய ஆற்றாமையை வெளியிட்டு |
| அலமந்தான் | வருந்தினர். |

* திருக்குடந்தை யெம்பெருமான் பக்கலிலே ஆழ்வார் சில பேறுகளை விரும்பினர். அவை எவை யென்னில், குளிர நோக்குதல் குசலப்ரச்னம் பண்ணுதல் தழுவுதல் முதலியன. அவற்றை ஆராவமுதன் தந்தருளாமையாலே ஆழ்வார் மிகவும் தளர்ந்து தம்முடைய ஆற்றாமையைப் பேசினாராயிற்று * ஆராவமுதே யென்னும் பதிகத்தில். திருக்குடந்தை யெம்பெருமானுக்கு ஆராவமுதாழ்வாரென்றே ஸம்பிரதாயத் திருநாமம். சிலர், ஆராவமுது என்று பிரித்து ஆழ்வாராதரித்த பேறுகளைத் தாராமையாலே என்று யோஜிப்பது சிறிதும் பொருந்தாது.

* நோற்ற நோன்பிலேனென்கிற கீழ்த்திருவாய்மொழியிலே வானமாமலை யெம்பெருமான் திருவடிகளில் வேரற்ற மரம்போலே விழுந்து மிகப்பெரிய ஆர்த்தியோடே சரணம் புகச் செய்தேயும் அப்பெருமான் முகங்காட்டிற்றிலன். இன்னார்க்கு இன்ன விடத்திலே முகங்காட்டுவது என்றொரு நினைப்புண்டே எம்பெருமானுக்கு; அதனாலே இவர்க்குத் திருக்குடந்தையிலே முகங்காட்டுவதாக அவன் நினைப்பிட்டிருக்கவுங் கூடுமே. ஆழ்வார் அப்படியே கருதினர். நமக்குத் திருக்குடந்தையிலே காட்சி தந்தருள்வதாக எம்பெருமான் ஸங்கல்பித்திருக்கக் கூடுமென்று எண்ணினர். எண்ணி, 'அங்குச்சென்று புகவே நம் அபே

க்ஷிதம் தலைக்கட்டும்; குறைகளெல்லாம் தீரும்' என்று கனக்கப் பாரித்துக்கொண்டு திருக்குடந்தையிலே சென்று புகுந்தார். சித்திரகூட மலைச்சாரலிலே வந்துசேர்ந்த பரதாழ்வான் தான் நினைத்தபடியான பரிமாற்றம் ஒன்றும் பெறாதாப்போலே, ஆழ்வாரும் புக்கவிடத்தில் திருக்கண்களை அலரவிழித்துக் குளிரநோக்கியருளுதல் திருப்பவளத்தைத் திறந்து ஒரு வார்த்தையருளிச் செய்தல் அணைத்தல் முதலானவற்றிலே ஒன்றுஞ் செய்யக் கண்டிலர். அக்ரூரன் கண்ணபிரானிடத்து வரச்செய்தே "மாம் அக்ரூரேதி வக்ஷ்யதி" என்று கனக்கப் பாரித்துக் கொண்டேவந்து, மனோரதித்தபடியே பெற்றானென்று கேட்டிருந்தோம். அங்ஙனே ஒன்றும் தாம் பெறாமையாலே மிகவருந்தி, ஸ்தநந்தய ப்ரஜையானது தாய்பக்கலிலே கிட்டி முகம் பெறாவிட்டால் அலமந்து நோவுபடுமாபோலே அவன் ஸந்நிதியிலே தளர்ந்து கிடந்து கூப்பிட்டு இன்னும் எத்தனை திருவாசல் தட்டித் திரியக்கடவேன்! என்னுமார்த்தியோடே தலைக்கட்டினார் * ஆராவமுது பதிகத்தில். ... ... .... (48)

## திருவாய்மொழி நூற்றந்தாதி—49

மாநலத்தால் மாறன் திருவல்லவாழ் புகப்போய் *
தானிளைத்து வீழ்ந்தவ்வூர் தன்னருகில் *—மேல்நலங்கித்
துன்பமுற்றுச் சொன்ன சொலவுகற்பார் தங்களுக்குப்
பின்பிறக்க வேண்டா பிற.

| | | | |
|---|---|---|---|
| மாறன் தான் | ஆழ்வார் | துன்பம் உற்று சொன்ன | வருந்தியருளிச்செய்த |
| மா நலத்தால் | மிகுந்த பிரேமத்தோடே | சொலவு | ஸ்ரீஸூக்திகளை |
| திருவல்ல வாழ் புக போய் | திருவல்லவாழிலே சென்று சேரப் புறப்பட்டு | கற்பார் தங்களுக்கு | கற்குமவர்களுக்கு |
| அவ்வூர் தன் அருகில் | அத்தலத்தின் ஸமீபத்தில் | பின் | இனிமேலும் |
| இளைத்து வீழ்ந்து | தளர்ந்து விழுந்து | பிற | வேறு பிறப்புக்கள் |
| மேல் | அதற்கு மேலே | | |
| நலங்கி | தோழிமாருடைய நிஷேதவசனங்களாலும் நலிவுபட்டு | பிறக்க வேண்டா | பிறக்கவேண்டியிராது; (முக்தி ஸாம்ராஜ்யமுமாகும்.) |

* * திருக்குடந்தையிலே தம்முடைய மனோரத ஸித்திபெறாத ஆழ்வார் திருவல்லவாழ்நகரிலாவது சென்று களிப்போமென்று அங்கேறச் சொல்லப் புறப்பட்டு முட்டமுடிய போகப்பெறாமே புறச்சோலையளவிலேயே தளர்ந்து விழுந்து ஆற்றாமை கரைபுரண்டு அருளிச்செய்த * மானேய் நோக்குப் பதிகத்தைக் கற்பார்களுக்கு இனி ஒரு நாளும் பிறவித் துன்பம் சேராமே பேரின்ப மெய்தலாகும் என்றதாயிற்று.

கீழ் * ஆராவமுதே யென்னும் திருவாய்மொழியில் திருக்குடந்தையிலே தளர்ந்தார்; அங்கு நின்றும் திருவல்லவாழென்கிற மலைநாட்டுத் திருப்பதியேறப்போக வொருப்பட்டு அங்குப்போகவும் முடியாமே அவ்வூர்க்கு அருகிலிருந்தவூரில் சோலைகளும், அங்குள்ள பரிமளத்தைக் கொய்துகொண்டு புறப்படுகிற தென்றலும், வண்டுகளின் இனிதான மிடற்றோசைகளும் வைதிகாநுஷ்டான கோலாஹலங்களும் மற்றுமுண்டான ஸம்பிரமங்களுமெல்லாம் தம்மை மிகவும் நலிய அவற்றாலுண்டான நோவுபாட்டைத் தோழிமாரைக்குறித்துத் தலைவி சொல்லும் பாசுரமாக அவதரித்ததாயிற்று * மானேய் நோக்குப் பதிகம். ... (49

# மருமமான வேதாந்த தத்துவம்.

[அந்யாபதேசம்.]

நவத்வாரம் என்பதோர் நகரத்தில் 'ஆனந்தவர்மா' என்னும் பெயர்பூண்ட ஓர் அரசனுளன். அவனுக்கு ஒரு மந்திரியும் பல சேவகர்களுமுண்டு. மிகவும் ஸரளமாகிய சிந்தையை உடையனுன அவ்வரசன், மேற்கூறியவர்களிடத்தில் மிகுந்த அன்பும் ஆதரவுமுடையனுய் அவர்களோடு ஒரு நீராகக் கலந்து வாழ்கின்றமைபற்றி ஒவ்வொருவரும் 'நாமே ராஜா, நாமே ராஜா' என்று தாங்கள் நினைத்துக்கொள்ளும்படியாயிற்று.

இங்ஙனம் நெடுங்காலம் நிகழ்கையில், அவரவர்களுக்குள்ள அவிவேகத்தினுல் ஒவ்வொருவனும் தன்னைத்தவிர அயலானை மிகத் தாழ்ந்தவனுகவும் தன்னையே அனைவர்க்கும் முதல்வனுகவும் நினைத்துக்கொண்டு எல்லாருமாகச்சேர்ந்து அரசனையுங்கூட அதிக்ஷேபிக்கலாயினர். ஒருவர்க்கொருவர் மஹத்தான விவாதத்தை ஏற்றுக்கொண்டனர். இவ்வாறு விவாதப்படுகிற இவர்கள் ஒருநாள் ஒரு பெரியோனைச் சென்று சேர்ந்து 'ஐயா! எங்களுக்குள் யார் முக்கியன்? என்பதைத் தாங்கள் தீர்மானித்துக் கூறவேணும்' என்று கேட்டுக்கொண்டனர்.

இதைக்கேட்ட அப்பெரியோன் இவர்களை நோக்கி, நண்பர்களே! இவ்விஷயத்தைத் தீர்மானிக்க அயலாரைக் கோரவேண்டியதேயில்லை; நீங்கள் தாமே தீர்மானித்துக்கொள்ளலாம்; ஒன்றுசொல்லுகிறேன் கேண்மின்; நீங்கள் ஒரு கூட்டமாக இருக்கிறீர்களே; இக்கூட்டத்தில் நின்றும் உங்களுள் ஒவ்வொருவனுக விலகிச்சென்று பாருங்கள்; அப்போது எந்த மனிதன் விலகிச் சென்றகாலத்தில் மற்றையோரனைவரும் உபயோகமற்றவர்களாகவும் அஸாரமாகவும் தோற்றுவர்களோ, அம்மனிதனே இக்கூட்டத்தில் முக்கியன் என்பதை எளிதில் தெரிந்துகொள்ளலாமன்றோ; ஆகவே ஒவ்வொருவராக விலகிச்சென்று பாருங்கள்' என்று ஓர் உபாயங் கூறினுன்.

அதைக்கேட்ட அனைவரும் 'ஆம், ஆம், இது ஒக்கும்; நல்ல உபாயமே' என்று தலைதுலுக்கி ஒவ்வொருவரும் அவ்வாறு செய்ய முன்வந்தனர். முதலில் 'ப்ரகாசாநந்தன்' என்பானெருசேவகன் இக்கூட்டத்தில் நின்றும் பிரிந்துபோய்ச் சிலகாலம் தேசாந்தரங்களில் சுற்றித்திரிந்து மீண்டுவந்தான். வந்ததும் நான் போனபிறகு நீங்கள் எவ்வாறிருந்தீர்கள்?' என்று அவன் மற்றையோரைக்கேட்க; அதற்கு அவர்கள் 'ஒரு வீட்டிலுள்ள மனிதர்களில் ஒருவன் இறந்தொழிந்தால் மற்றையோர் எவ்வாறிருப்பர்களோ அவ்வாறுதானிருந்தோம்' என்று மறுமொழி கூறினர். பிறகு, ஸௌரபாநந்தன், ஸ்பர்சாநந்தன், ரஸராகன், ஸல்லாபாநந்தன் முதலிய பல சேவகர்களும், அவர்கட்குப் பின் மந்த்ரியும் க்ரமமாக ஒருவருக்குப் பிறகு ஒருவராக வெளியே விலகிச் சென்றிருந்து திரும்பி வருங்கால் மற்றவர்களை ஒருவிதமான குறையுமில்லாதவர்களாகவே கண்டனர்.

கடைசியாக 'ஆனந்தவர்மா' என்கிற அரசன் விலகிப்போக எழுந்தான்; எழுந்த உடனே, குளம் வற்றினவாறே அங்கு மலர்களும் உயிர்களும்போல் நிறமழிந்து நிலைதளும்பிச் சோர்வடைந்து விம்மல்தும்மலாய்க் கைகூப்பி 'அப்பா நீதான் நமக்குள் முக்கியன், நீயே அரசன்; ஒரு நொடிப்பொழுது உன்னை நாங்கள் பிரிந்தபோதிலும் வாழகில்லோம்;

நீ விலகவேண்டா' என்று அனைவரும் கதறினர். பிறகு அரசன் அமைந்திடவே நகரம் நன்மைபெற்று விளங்கியது.

நண்பர்காள்! இந்த கதாரஹஸ்யம் இன்னதென்று நீங்கள் உணர்ந்தீர்களோ? இதனை ஓர் ரூபகமாகக் கொண்மின்; நமது சரீரமே நவத்வாரமென்னும் நகரம்; இதில் ஆனந்தவர்மாவென்னும் அரசனுவான் ஜீவாத்மா; அவனுக்கு மந்திரி மனஸ்ஸு; மற்ற இந்திரியங்கள் சேவகர்கள். ப்ரகாசாநந்தனென்பது நேத்ரேந்த்ரியம். ஸௌரபாநந்தன்—க்ராணேந்த்ரியம். ஸ்பர்சாநந்தன்—த்வகிந்திரியம். ரஸராமன்—ரஸநேந்த்ரியம். ஸல்லாபாநந்தன்—வாகிந்த்ரியம். இந்திரியங்கள்தான் ஆத்மாவென்றும், மநஸ்ஸுதான் ஆத்மாவென்றும் இப்படி பலர் நினைக்கிறார்களன்றோ? அது சரியல்ல என்பதை இதனால் கண்டுணர்வீராக.

---

## எங்குந்திருவருள்பெற்றின்புறுகையே.

அஷ்டக்ரஹ கூடத்தினுல் எங்கும் கஷ்ட நஷ்டங்கள் ஏற்படுமென்றும், சில சில விடங்களில்தான் ஏற்படுமென்றும், எப்படியும் பல விடங்களில் கோளாறுகள் ஏற்பட்டே தீருமென்றும் இப்படி பல்வாறான பேச்சுக்கள் இருந்துவந்தன. ஜகத்தில் எங்குமே அச்சம் குடிபுகுந்திருந்தது. கெட்ட காலமாகக் கருதப்பட்ட அக்காலம் கடந்துவிட்டது. ஓரிடத்திலும் ஒருவிதமான கோளாறும் ஏற்படவில்லை. * இமவந்தந்தொடங்கி யிருங்கடலளவும். * என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடியும். "ஆஸேதோ: ஹிமநக: ...... ஆவநதாவகனாம்.' என்று தொடங்கி ஆளவந்தாரருளிச் செய்தபடியுமுள்ள நாற்றிசையிலும் நமக்கு ஆப்தர்கள் மலிந்துள்ளார்கள். அவரவர்கள் நமக்கெழுதிய குசலபத்ரிகைகளினுல் நம் இந்தியநாடு முழுவதும் க்ஷேமமும் ஸுபிக்ஷமும் குறையற்றிருப்பதாகவே யறிந்து மகிழ்கிறோம்.

இந்த வியாஜத்தினுல் எங்கும் அனேக விதமான ஜப பாராயண ஹோமாதிகள் நடந்தன; நடந்துகொண்டுமிருக்கின்றன. இதன் பலனுகவே க்ஷேமம் விளைந்ததென்றும் நினைக்கலாம். எல்லாரும் நல்லகாரியங்களைச் செய்து நற்போது போக்கவேணுமென்கிற திருவுள்ளத்தினுலேயே எம்பெருமான் கஷ்டநஷ்ட ஆஸ்தாவத்தை யுண்டுபண்ணினன் போலும்.

"தழை நல்லவின்பந் தலைப்பெய்து எங்குந்தழைக்கவே."

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்

# பிலவஙூ மீன விசாகோத்ஸவப் பத்திரிகை

ஸ்ரீஸ்வாமியின் எழுபத்தோராவது திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு

நாளது பங்குனிமீ 1உ முதல் 17உ வரை

## 14–3–62 To 30–3–62

*ஸ்ரீகாஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்*

வேதபாராயணம் திவ்யப்ரபந்தஸேவை ரஹஸ்யாநுஸந்தானம் ஸ்தோத்ர பாடம் வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும்.

ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி ப்ரார்த்திக்கப்படுகிறார்கள்.

வேதபாராயண கோஷ்டிகள் கடந்த ஸம்வத்ஸரங்களிற்போலவே ஸாமவேதம், சுக்லயஜுஸ், யஜுர்வேதம் க்ரமாந்தம் திருவீதி வலத்துடன் நடைபெறும்.

வேதபாராயணங்கள் **16** நாட்கள் நடைபெறும். திவ்யப்ரபந்தஸேவை **16–3–62**-ல் தொடக்கமாகி **25–3–62** ஞாயிற்றுக்கிழமை திருவிசாகத்தன்று சாத்துமுறையாகும். **30–3–62** வெள்ளிக்கிழமையன்று வேதசாந்தியாகும்.

### விசேஷக் குறிப்பு

சென்ற வருஷம் ஸ்ரீஸ்வாமிக்கு எழுபதாவது திருநக்ஷத்ர பூர்த்தியென்னும் விசேஷத்தை முன்னிட்டு சென்னைவாஸிகளான பக்த வர்க்கங்கள் விசேஷித்து வேதகோஷ்டியிலும் திவ்யப்ரபந்த கோஷ்டியிலும் வித்வத் கோஷ்டியிலும் ஸ்தோத்ரகோஷ்டியிலுமாகச் சேர்ந்து எழுபது ஸ்வாமிகள் ஸேவை ஸாதிக்கும்படியாகச் செய்ததுபோல இவ்வருஷத்தில் எழுபத்தோராவது திருநக்ஷத்ர பூர்த்திக்காக 71 ஸ்வாமிகளை எழுந்தருளச்செய்ய ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

காஞ்சீபுரம்,<br>21–2–1962.

ப்ரவாதிபயங்கரம் செல்வமணி என்கிற

ரங்கநாத தாஸன்.

Sreemathe Ramanujaya Namah



Sri Kanchi Maha Vidwan

Jagadacharya Simhasanadhipathi

# P. B. Annangaracharya Swami's

## SEVETY FIRST BIRTHDAY CELEBRATIONS

The Seventy first Birth day of Sri Swami is being celebrated this year at his residence in Kanchi from 14-3-1962 to 30-3-62. As usual, Vedas, Divya Prabandhams, Stotras, and Rahasyas will be chanted. Procession of the Veda Goshti and religious lectures will also take place. Vedaparayanam will commence on 14-3-62 and Divya Prabandham on 16-3-62. Divya Prabandham will end on 25-3-62 and Vedaparayanam on 30-3-62.

SPECIAL NOTE

In view of the completion of the seventieth Holy Birthday of Sri Swami last year Devotees of Madras took great zeal to honour the Swami with special and significant programmes the foremost of them being the assembling of seventy Swamis in all in the Vedas, Divya Prabandham, Stotras, Rahasyas, and Vidvath Goshti. Similarly, in view of the seventy first birthday completion this year, the devotees have arranged with no less zeal for seventyone Swamis to assemble and take part in the chants.

P. B. CHELLAMANI alias

RANGANATHACHARYA.

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.
ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# சங்கத்தமிழ்மாலை முப்பது.

**ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.**

*பாதகங்கள் தீர்க்குமதாய், பரமனடி காட்டுமதாய், வேதமனைத்துக்கும் வித்தாகுமதான திருப்பாவையின் முடிவில் "பட்டர்பிரான் கோதை சொன்னசங்கத் தமிழ் மாலை" என்றருளிச் செய்யப்பட்டிருப்பதன் சுவையை நோக்கிச் சில ரஸிகர்கள் "பாரோர் புகழ்மாலை, உய்வுமாலை, செல்வமாலை, மகிழ்மாலை.... திருவருள்மாலை" என்றிப்படி முப்பது மாலைகளாகப் பெயரிட்டு வெளியிட்டு ஒவ்வோருபந்யாஸகரும் அடைவே ஒவ்வொருமாலையைப்பற்றி ஸ்வல்பநிமேஷங்களில் பேசவேணு மென்று கோரினார்களாம். பிறகு என்னயிற்றென்பதை அறியோம். இம் முப்பது மாலை களையே சீர்ஷகமாக வைத்து அவற்றில் உபஜீவிக்கவேண்டிய அர்த்தவிசேஷங்களை ஈண்டு நாம் அடைவே உபஹரிக்கிறோம். ரஸிகர்களும் விவேகிகளும் வாசித்து மகிழ்க. அடுத்த சுபக்ருத்வரு மார்கழியில் உபந்யாஸகர்களுக்கு இவ்வுபஹாரம் மிகச்சிறந்த ஜீவாதுவுமாகும். ஏற்கெனவே கிடைத்திருக்கிற ஜீவாதுக்களில் தலையானது இது.

## 1. பாரோர் புகழ்மாலை

முதற்பாட்டின் ஈற்றடியில் "பாரோர்புகழ" என்றிருப்பதை நோக்கியது இம் மாலைப் பெயர்க்குறிப்பு. "பாரோர் புகழ" என்பதற்கு உலகமெல்லாங் கொண் டாடும்படி யென்று பொருள். "க்க்யாதிலாப பூஜாபேக்ஷையற மலர் நாடி யாட்செய்ய" என்பது ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தி. க்க்யாதியிலும் லாபத்திலும் பூஜையிலும் அபேக்ஷையற்றிருப்பர் பெரியார். பாரோர் புகழவேணுமென்பதை விரும்பலாமோ? விரும்பினல் க்க்யாதியில் அபேக்ஷையிருப்பதாகவன்றோ ஏற்படும். இதுதகுதியன்றே. மேலே இருபத்தேழாம் பாட்டிலும் "நாடு புகழும் பரிசினல் நன்றாக" என்றுள்ளது. திருவாய்மொழியில் *ஒழிவில் காலப்பதிகத்திற்குப் பலன் கூறும் நம்மாழ்வாரும் *வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே" என்றருளிச் செய்கிறார். பாரோர் புகழ் வதையும் நாடு புகழ்வதையும் ஞாலம் புகழ்வதையும் பரமைகாந்திகள் எதிர்பார்க்கத் தகாதே. தத்துவமிங்ஙனே யிருக்க, மேலே குறித்த ஸ்ரீஸூக்திகள் எங்ஙனம் அவ தரித்தன வென்னில்; இதற்குப் பலவகையான ஸமாதானங்களுண்டு; ஒருவகையான ஸமாதானம் மட்டும் இங்குணர்த்துவோம். புகழ என்றது மகிழ என்றபடி. ஒருவர்

மற்றொருவரைப் புகழவேண்டுமேயானல் முன்னம் மகிழ்ச்சியுண்டாகவேணும். அந்த ரங்கத்தில் மகிழ்ச்சியுண்டாகாமல் பண்ணும் புகழ்ச்சி இகழ்ச்சியேயாகும். "முகநக நட்பது நட்பன்று, நெஞ்சத்தக நக நட்பது நட்பு" என்ற திருக்குறள் இங்கு ஒருவாறு நினைக்கத்தகும். 'உலகமெல்லாம் உகக்கும்படி' என்று பொருள் தேறிற்று. ஏவஞ்ச "காரணே கார்யோபசார:" என்ற ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஜ்ஞர்களின் வழக்குப்படி 'பாரோர் மகிழ' என்னவேண்டுமிடத்து 'பாரோர்புகழ' எனப்பட்டதென்றதாயிற்ற. புகழ்ச்சி எப்படி விரும்பத்தகாததோ, அப்படி மகிழ்ச்சியும் விரும்பத்தகாததுதானோ யென்ன வேண்டா. நம்முடைய செய்கையினல் ஒருவர்க்கும் அருவருப்பு உண்டா காமல் யாவர்க்கும் மகிழ்ச்சியுண்டாகவேணுமென்று கோருவது ப்ராப்தமேயாகும்.

"பாரோர் புகழப் படிந்து நீராடப்போதுவீர்! போதுமினோ" என்கிற அந்வயம் போலவே "நாராயணனே நமக்கே பாரோர் புகழப் படிந்து பறைதருவான்" என்கிற அந்வயமும் கொள்ளற்பாலதே. இவ்வந்வயத்தில், படிந்து என்பதற்கு 'விதேயனுகி' என்று பொருளாம். திருவாய்மொழியில் (10-6-1) * ஆழியானருள்தருவா னமை கின்ருன் அது நமது விதிவகையே * என்றவிடத்திற்கு இருபத்து நாலாயிரப்படியிலும் ஈடு முப்பத்தாறுயிரப்படியிலும் இன்சுவைப் பொருளுள்ளது காணவேணும். ஈட்டு ஸ்ரீஸூக்தி வருமாறு;—

"[அது நமது விதிவகையே.] அது நம்முடைய பாக்யாநுகுணமாகவிறே யென்று இதுக்குப் பூருவர்கள் நிர்வஹிக்கும்படி: இத்தை எம்பெருமானர் கேட் டருளி 'இத் திருவாய்மொழியில் மேலோடுகிறரஸத்தோடு சேராது; நாம் விதித்த படியே செய்வானுயிருந்தானென்கிருர்' என்றருளிச் செய்தார். .......நமது சொல் வகையேஎன்னுதே விதிவகையே என்பானென்னென்னில்; வித்யதிக்ரமத்தில் ப்ரத்ய வாயத்துக்கு அஞ்சுவாரைப்போலே அஞ்சா நின்ருன். ......"

இவ்வண்ணமாகவே இங்கும் பொருள் கொள்ள இடமுள்ளது. நாராயணன் நமக்குப் பறை தருமிடத்தில் "படிந்து பறைதருவான்"=நாம் கீறின கீற்றைக் கடவாமே நாம் விதித்தபடியே தருவான்; அப்படி அவன் தரும்படியைக் கண்டு பாரோர் புகழா திருக்க முடியாது. நிரங்குச ஸ்வதந்திரனை நாராயணன் வல்லவீஜநவல்லபனுய்ப் பிறந்து இப்படி அவர்கள் விதத்தபடி செய்வதே! என்று அவனது எளிமையைப் புகழவேணு மென்கிற பொருள் ரஸவத்தரம். .... .... .... (1)

## 2. உய்வு மாலை

இரண்டாம் பாட்டின் ஈற்றடியில் "உய்யுமாறெண்ணி" என்றிருப்பதை நோக்கியது இம்மாலைப்பெயர். "உய்யும் ஆறு" என்றவிடத்து (ஆறு) என்றது (6) ஆறென்னும் லக்கத்தைச் சொன்னதாகி, எம்பெருமானர்க்காகத் திருக்கச்சி நம்பிகள் தேவப்பெருமாள் பக்கலில் பெற்று வெளியிட்டருளின ஆறு வார்த்தைகளை நாம் சிந்தித்து உகப்பதும் ஸூசிதமாகிறதென்றும், இது அலங்கார சாஸ்த்ரத்தில் முத்ரா லங்கார ப்ரக்ரியை யென்றும் நம்முடைய திருப்பாவை விசேஷார்த்தவுரையில் விவரித் துள்ளோம். இங்கு, கண்ணபிரான் விஷயமான ஆறுவார்த்தைகளை அருளிச் செயல் களிலிருந்து அருமருந்தாகவெடுத்துக் காட்டி ரஸிகர்களை ரஸிக்கச் செய்வோம்.

கண்ணபிரான் விஷயமான ஆறு வார்த்தைகளாவன:—

1. வதுவை வார்த்தை.
2. நெய்யுண் வார்த்தை.
3. வெண்ணெய் வார்த்தை.
4. நடந்த நல்வார்த்தை.
5. மெய்ம்மைப் பெருவார்த்தை.
6. கஞ்சன் விடுத்தானென்பதோர்வார்த்தை.

இவ்வார்த்தைகளுக்கு ஆகரம் முன்னம் காட்டிவிட்டுப் பிறகு விவரணம் செய்வோம்.

1. திருவாய்மொழி 5-10-2. * வதுவை வார்த்தையுளேறு பாய்ந்ததும் *
2. „ 5-10-3. * நெய்யுண்வார்த்தையுளன்னை கோல்கொள்ள *
3. „ 6-2-11. * ஆய்ச்சியாகிய வன்னையாலன்று வெண்ணெய் வார்த்தையுள் சீற்றமுண்டழுகூத்தவப்பன்.*
4. „ 7-5- 9. * தேச மறியவோர் சாரதியாய்ச்சென்று சேனையை நாசஞ் செய்திட்டு நடந்த நல்வார்த்தை.
5. நாச்சியார் திருமொழி 11—10. * செம்மையுடைய திருவரங்கர் தாம்பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை.
6. பெரியாழ்வார் திருமொழி 2-8-6. * கஞ்சன் கறுக்கொண்டு நின்மேல் கருநிறச் செம்மயிர்ப்பேயை, வஞ்சிப்பதற்கு விடுத்தானென்பதோர் வார்த்தையுமுண்டு.*

(சிறு குறிப்பு :—ஒன்று முதல் ஐந்து வரைக்குமுள்ள பாசுரங்களிற் காணும் வார்த்தைகள் ஸாக்ஷாத்தாகக் கண்ணபிரானையே ஸம்பந்தித்தவை. இப்படிப்பட்ட ஆறாவது வார்த்தை யொன்று கிடைக்க வில்லையேயென்று அடியேன் அலமந்து ஆழ்வாராசாரியர்களின் திருவடிகளைச் சிந்தித்து நின்றபோது, மேலே கண்ட ஆறாவது பாசுரத்தை [வார்த்தையை]ப் பரமகாருணிகரான ஆழ்வார் ஸ்புரிக்கச் செய்தார். அந்தப் பாசுரம் மற்ற ஐந்து பாசுரங்கள் போலல்லாமல் "என்பதோர் வார்த்தையுமுண்டு" என்று விலக்ஷணமாக அமைந்திருப்பது—அடியேனைத் தட்டியெழுப்பிக் காட்டிக் கொடுப்பதுபோலன்றோவுள்ளது. இதையும் கண்ணபிரானுறு வார்த்தைகளில் சேர்த்துக்கொள்ள என்ன தடை? தாராளமாகச் சேர்த்துக்கொள்ளாய்—என்று நியமிப்பதுபோலவே பாசுரம் அவதரித்துள்ளதேயென்று பாவியேன் னெஞ்சு நீர்ப்பண்டமாயிற்று.)—இவ்வாறு வார்த்தைகளைப் பற்றிச் சிறிது விவரணம் காட்டுகிறேன்.—

**(1) வதுவை வார்த்தை.** எம்பெருமானுடைய வொரு திவ்ய மஹிஷி ஜனக சக்ரவர்த்தியின் திருமாளிகையிலே ஸீதா பிராட்டியாய் வளர்ந்தவாறுபோல, மற்றொரு திவ்ய மஹிஷி நப்பின்னைப் பிராட்டியாய் கும்பர்மகளாய் வளர்ந்துவர, ஸீதா விவாஹத்திற்கு வில் முறியைப் பந்தயமாக வைத்திருந்ததுபோல நப்பின்னை திருமணத்திற்கு எருது முறியைப் பந்தயமாக வைத்திருந்தார் அவளது திருத்தந்தையார். "எருதேழையும் நிரஸிப்பாற்கு இவளைக் கொடுக்கக் கடவோம்" என்று பிறந்த பிரஸித்தியே **வதுவை வார்த்தை** யெனப்படும். எருதேழையுமடர்த்துப் பின்னைதோள் மணந்ததளவும் இந்த வார்த்தையில் அநுஸந்தேயம்.

**(2) நெய்யுண் வார்த்தை.** யசோதைப் பிராட்டி நெய்யைத் திரட்டிக் குறியிட்டு வைத்துப்போய்ச் சிறிதுபோது கழித்துவந்து பார்த்தாள். குறியழிந்து கிடக்கையாலே நெய் களவு போயிற்றென்றாள். அவ்வளவிலே கண்ணன் கண்ணைப் பிசையத் தொடங்கினான்; அவ்வளவிலே யசோதை 'நீராமிது செய்தீர்' என்று ஒரு கோலைக் கையிலெடுத்தாள். தாயெடுத்த கோல்தானே, இதுதான் சிறுகோல்தானே, என்ன ப்ரமாதம் நேர்ந்துவிடும்! என்று ஆறியிராமே தாமரைக் கண்கள் நீர்மல்க நின்றான்; * அழுகையுமஞ்சி நோக்குமந்நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும் தொழுகையுமானான். இந்த விசேஷம் நெய்யுண் வார்த்தையில் அநுஸந்தேயம்.

**(3.) வெண்ணெய் வார்த்தை.** * ஆய்ச்சியாகிய வன்னையால் அன்று வெண்ணெய் வார்த்தையுள் சீற்றமுண்டழுகூத்தவப்பனும் நங்கண்ணன். ஊரிலே வெண்ணெய்

களவு போயிற்றென்றொரு வார்த்தை பிறந்ததாம். 'கண்ணா! நீயா வெண்ணெய் திருடினாய்!' என்று கேட்டாராருமில்லை. ஆயினும், இக்களவு வார்த்தை நம்மையன்றி வேறொருவரையும் இலக்காகக் கொள்ளாதென்று தானே யழப்புக்கான். இவ்விடத்திற்குப் பொருத்தமாக நம்பிள்ளை ஒரு லௌகிக கதையை யருளிச் செய்வர்; "மடம் மெழுகுவார் ஆர் என்ன, அச்ரோத்ரியன் என்றார்கள்! இப்பரப்பெல்லாம் என்னாலே மெழுகப்போமோ வென்றான்; அது போலே" என்று. அதாவது, பலர் கூடி ஒரு பெரிய மடத்திலே தங்கப் போனார்கள். அந்த மடம் அகலமும் நீளமும் அதிகமாகக் கொண்டிருக்கவே, இவ்வளவு பெரிதான இச் சத்திரத்தை நித்தியம் மெழுகி விளக்கவேணுமே, அது யார் செய்வதோ? என்று சிலர் பேசிக்கொண்டார்களாம். அதற்கு ஒருவன் பதில் சொன்னானும் 'தங்கியுறங்கி யெழுந்து போக வந்தவுங்களுக்கு இந்த விசாரம் ஏதுக்கு? எவனோவொரு விதவாபுத்ரன் அந்த வேலையைச் செய்து போகிறான்' என்று. அந்தத்திரளிலே மெய்யாகவே ஒரு விதவா புத்ரன் இருந்து அவன் காதிலே இந்த வார்த்தை விழுந்தது. 'ஐயோ! இவ்வளவு பரப்பு என்னாலே மெழுகிப் பெருக்கப்போமோ?' என்று அவன் அழத் தொடங்கினானாம். அதனாலே தன்னுடைய அவத்யத்தைத் தானே வெளியிட்டுக் கொண்டானாயிற்று. அதுபோலே, வெண்ணெய் களவு ப்ரஸங்க மாத்ரத்தில் அழுத கண்ணனும் தன்னுடைய களவைத் தானே வெளியிட்டுக் கொண்டானென்கை. இந்த விசேஷமே வெண்ணெய் வார்த்தையில் அநுஸந்தேயம்.

(4.) நடந்த நல்வார்த்தை. * தாயஞ் செறு மொருநூற்றுவர் மங்க வோரைவர்க்காய்த் தேசமறிய வோர் சாரதியாய்ச் சென்று சேனையை நாசஞ் செய்திட்டு நடந்த நல்வார்த்தை இது. பஞ்சபாண்டவர்க்குக் கையாளாயிருந்து இழிதொழில் செய்து பார்த்தஸாரதி யென்று பேர்பெற்றுத் தாழ நின்று அநிஷ்டவர்க்கங்களைக் களைந்து *க்ருத்வா பாராவதரணம் ப்ருதிவ்யா: ப்ருதுலோசந:, மோஹயித்வா ஜகத் ஸர்வம் கத: ஸ்வம் ஸ்தாநமுத்தமம் * என்கிறபடியே தன்னடிச் சோதிக்கு நடந்த நல்வார்த்தையென்க. எம்பெருமான் திருநாடேற வெழுந்தருளினானென்கிற வித்து தீய வார்த்தையே யொழிய நல்வார்த்தை யாகுமோ வென்ன வேண்டா; * களிமலர்த்துழாயலங்கல் கமழ்முடியன் கடல் ஞாலத்து அளிமிக்கான் * என்று ஆழ்வாரருளிச் செயதபடியே எம்பெருமான் இந்நிலத்திலே வாழ மிகவும் விருப்ப முடையவனே; ஸம்ஸாரிகளாய் எதிரம்பு கோத்து நலிய நினைப்பாரும், * அவஜாநந்தி மாம் மூடா: * என்றும் * ந மாம் துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா:, மாயயா அபஹ்ருதஜ்ஞாநா ஆஸுரம் பாவமாச்ரிதா: * என்றும் தானே நெஞ்சாறல்படும்படி அவமானம் பண்ணுவாரும் மலிந்தபடியாலே 'இவ்விடத்தை விட்டுக் கிளம்பிப் போனால் போதும்' என்றாய்விட்டது அவன்றனக்கே. நல்லபடியாய்த் தன்னிடம் போய்ச் சேர்ந்தானே யென்று அன்பர்களும் உகக்க வேண்டியதாயிற்று. ஆகவே தன்னடிச் சோதியேற நடந்ததை நல்வார்த்தை யென்னக் குறையில்லை யென்க.

(5.) மெய்ம்மைப்பெருவார்த்தை, * செம்மையுடைய திருவரங்கர் தாம்பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தையாவது, * மாயனன்றைவர்தெய்வத் தேரினில் செப்பிய கீதையின் ஸாரமான * ஸர்வதர்மாந்த்யாதியாகவுள்ள சரமச்லோகமாகிறவார்த்தை. கண்ணபிரான் வார்த்தையான விதனைத் திருவரங்கர் தாம் பணித்த வார்த்தையாகச் சொல்லுவானென்னென்னில்; * வளவெழுந்தவளமாட மதுரைமாநகரந்தன்னுள் கவளமால் யானைகொன்ற கண்ணனை அரங்கமாலை * என்றும், * கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்டவாய னென்னுள்ளங் கவர்ந்தானை அண்டர் கோனணியரங்கன் * என்றும் கண்ணனையும் அரங்கனையும் ஒரேவ்யக்தி யாகவன்றோ உகந்திருப்பது. பெரியாழ்வார் * வெண்ணெய் விழுங்கி வெறுங் கலத்தை * என்கிற பதிகம் முழுவதாலும் கண்ணபிரான் செய்த தீம்புகளைச் சொல்லிவிட்டு நிகமனப்

பா்சுரத்தில் * வண்டுகளித் திரைக்கும்பொழில் சூழ் வருபுனற்காவிரித் தென்ன ரங்கன் பண்டவன் செய்த கிரீடை யெல்லாம் * என்று ஸ்ரீரங்கநாதனை செய்த செயலாகவன்றோ தலைக்கட்டிற்று. ஆண்டாள் தானும் * கண்ணாலங்கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான் திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்த பெண்ணாளன் பேணுமூர் பேருமரங்கமே * என்றிறே * மெய்ம்மைப் பெருவார்த்தையென்ற அப்பாசுரத்தின் கீழ்ப்பாசுரத்திலே சொல்லிவைத்தது. ஆகவே திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை கண்ணன் வார்த்தையேயாம். "அநாதிகாலம் பாபங்களைக்கண்டு நீபட்டபாட்டை அவைதான் படும்படி பண்ணுகிறேன், இனி உன்கையிலுமுன்னைக் காட்டித்தாரேன்; என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக் கொள்ளேனோ? பாபங்களை நான் பொறுத்துப் புண்யமென்று நினைப்பிடா நிற்க நீ சோகிக்கக் கடவையோ?" என்றருளிச் செய்த மெய்ம்மைப் பெருவார்த்தையிது.

(6.) கஞ்சன் விடுத்தானென்பதோர் வார்த்தை. தன்னைக் கொல்லப்பிறந்த கண்ணனென்னும் கருந்தெய்வம் * சீதக்கடலுள்ளமுதன்னதேவகி கோதைக்குழலாளசோதைக்குப்போத்தந்த பேதைக்குழவியாய்த் திருவாய்ப்பாடியிலே யொளித்து வளர்கின்ற தென்றறிந்த கம்ஸன் * ஸ துர்தமாந் ஆஸுர ஸத்வபேதாந் நேதா ஸமாஹூய த்ருசம்ஸசேதா:, ப்ரஸ்தாபயாமாஸ பரைரத்ருஷ்யம் நந்தாஸ்பதம் நாதவிஹாரகுப்தம் * என்று யாதவாப்யுதயத்திற் பணித்தபடியே கண்ணனை நலியும்பொருட்டுப் பலபல ஆஸுரப்ரக்ருதிகளை ஏவினனென்றும் அவற்றிலே ஒன்று பூதனையென்னும் பேய்ச்சியாய் பெற்றதாய்போல் வஞ்சக வேஷத்துடன் வந்து நஞ்சுதீற்றிய முலையை யுண்ணக் கொடுத்து முடிந்துபோனகதை ஸுப்ரஸித்தம். அந்தப்பூதனை வந்து மாண்டுபோய் எத்தனையோநாள் கடந்த பிறகு "கஞ்சன் கறுக்கொண்டு நின்மேல் கருநிறச் செம்மயிர்ப்பேயை வஞ்சிப்பதற்கு விடுத்தானென்பதோர் வார்த்தையுமுண்டு" என்று யசோதை சொல்லுவதாக ஆழ்வாரருளிச் செய்ததானது விரோதி நிரஸநவார்த்தையை அநுஸந்தித்தபடியாமத்தனை. ஆக இந்த ஆறு வார்த்தையும் ரஸிகர்களுக்கு நித்யாநுஸந்தேயம். இவையே உய்யும் ஆறு. .... (2)

## 3. செல்வமாலை

மூன்றாம் பாட்டினீற்றடியில் "நீங்காத செல்வம் நிறைந்து" என்றிருப்பதை நோக்கியது இம்மாலைப் பெயர். இங்கு ஆண்டாள் உத்தேசித்த செல்வம் அவளாலேயே ஸ்பஷ்டமாக விளக்கப்பட்டுள்ளது; (அதாவது) "வள்ளல் பெரும் பசுக்கள் நீங்காத செல்வம்" என்று சொல்தொடருள்ளது. கைம்மாறு கருதாமல் மஹார்த்தங்களை யருளிச்செய்கையில் மஹா உதாரர்களாயிருப்பவர்கள் வள்ளல் எனப்படுவர்கள். "கவாம் அங்கேஷு திஷ்டந்தி புவநாநி சதுர்தச" என்கிறபடியே பதினன்கு லோகங்களையும் தம்முட் கொண்டிருக்கும் பசுக்களைப் போலே பதினன்கு வித்யைகளையும் தம்முள் தரித்திருப்பவர்களாய், பஞ்சகவ்யம் போன்ற அர்த்த பஞ்சகத்தினால் ஸகலாத்மாக்களையும் புனிதராக்குமவர்களான மஹாசார்யர்கள் இங்குவிவக்ஷிதர்கள். இவர்களாலே நீங்காத செல்வம் நிறைந்து—அத்யாத்ம வித்யையும் அதன் பலனான பக்தியும் ஒருநாளும் குறையாமே மேன்மேலும் பெருகிச்செல்லுமென்றபடி. நிறைந்து என்றது நிறைந்திடும் என்றவாறு. உலகத்தார் செல்வமென்று நினைக்குமது உபாதி விசேஷங்களாலே நீங்குமது; மேற்சொன்ன செல்வமே நீங்காததாகும். இந்த வள்ளல் பெரும் பசுக்கள் எப்படிப்பட்டவை யென்றால், தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி வாங்கக் குடம் நிறைக்குமவை. தேங்குதல்—தயங்குதல் தியங்குதல் இவை பர்யாய மொழிகள். ஆசார்யன் திருமாளிகையில் தயங்காமல் புக்கிருக்க

வேண்டும். வருஷக்கணக்காக வாஸஞ் செய்வதிலும் "தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா" என்று கீதாசார்யன் விதித்த கட்டளைகளை நிறைவேற்று வதிலும் தயங்காமல் குருகுலவாஸம் செய்யவேணும். [சீர்த்த முலைபற்றி வாங்க] பசுக்கள் நான்கு முலைக் கண்களாலும் பால் சுரக்கும்; அதுபோல ஆசாரியர்கள் நான்கு ஹேதுக்களாலே சீரிய பொருள்களைச் சுரப்பார்கள். (1) எம்பெருமான் இவர்களை இந்நிலத்திற்கனுப்பியது சிஷ்யோஜ்ஜீவனத்திற்கேயாதலால் பகவதாஜ்ஞா பரிபாலன மென்னும் நினைவு. (2) சிஷ்யர்கள் வருந்தி வேண்டிக்கொள்ளுதல். (3) அவர்கள் வேண்டிக் கொள்ளாவிடினும் அவர்களது துர்க்கதி கண்டு ஸஹிக்கமாட்டாமை. (4) தாங்கள் வாய்விட்டுச் சொல்லாதொழியில் தரிக்கமாட்டாமை—ஆக இப்படிப்பட்ட நான்கு ஹேதுக்களாலும் ப்ரவசனம் செய்ய வேண்டியவர்களாதலால் இவை சீர்த்த முலைகளாம். [பற்றி வாங்கக் குடம் நிறைக்கும்] அர்ஜுனன் "சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்" என்று ஒரு சொல் சொல்லி ப்ரார்த்தித்தவாறே அத்யாய மத்யாயமாகக் கறந்த கீதாசார்யனைப் போலவும், "நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம்" என்கிறபடியே வான்மீகி முனிவர் கேட்டவாறே ஸ்ரீராமாயணாம்ருதத்தைக் கறந்த நாரதமஹர்ஷி போலவும், "மைத்ரேயஃ பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபிவாத்யச" என்கிறபடியே மைத்ரேயர் கேட்டவாறே *சிதசிதீச்வரதத்ஸ்வபாவ போகாபவர்க்கததுபாயகதிகளைக் கறந்த பரர்சர பகவான் போலவும், 'ஹிதமருளிச் செய்யவேணும்' என்று பிரார்த்தித்தவாறே * கடல்வாய்ச் சென்று மேகங் கவிழ்ந் திறங்கிக் கதுவாய் படநீர்முகந்தேறி யெங்கும் குடவாய்பட நின்று மழை பொழியும் * என்றாப்போலே தாரை தாரையாக வர்ஷித்துக் குடங்குடமாக நிறைப்பர்களாம் மஹாசார்யர்கள். குடம் என்றது பாத்ரமென்றபடியாய் ஆசார்ய தயாபாத்ர பூதர்களான ஸச் சிஷ்யர்களைச் சொன்னபடி. இவர்களை நிறைக்கையாவது-தம்மோடொக்க ஞானபூர்த்தியுடையவர்களாகச் செய்கை. இப்படிச் செய்யவல்ல வள்ளல் பெரும் பசுக்களாலே-[மஹாசார்யர்களாலே] நீங்காதசெல்வம் நிறைந்திடும்—ஒருநாளு மழியாததும் குறையாததுமான ஜ்ஞானபக்திச் செல்வம் நிறையும் என்றதாயிற்று.

## 4. மகிழ்மாலை

நாலாம்பாட்டின் ஈற்றடியில் "நாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்து" என்றிருப்பதை நோக்கியது இம்மாலைப் பெயர். திருப்பாவையில் மார்கழி நீராட்டமென்கிற ப்ரஸ்தாவம் நாலைந்து பாசுரங்களில் வருகிறது. நீரிலே படிந்து குடைந் தாடுகையாகிற நீராட்டமன்று ஆண்டாளுக்கு விவக்ஷிதம். பின்னை எது விவக்ஷிதமென்னில்; அதை அடுத்தபடி தெரிவிப்போம்; நீரில் படிந்தாடுகை விவக்ஷிதமன்று என்றதை முன்னம் முதலிப்போம். முதற்பாட்டில் "நீராடப்போதுவீர் போதுமினோ" என்று நீராட வருகிறவர்களெல்லீரும் வாருங்களென்று அழைத்து, இந்த நாலாம் பாட்டில் மேகத்தையும் விளித்து "நாங்களும் மார்கழி நீராட வுலகினில் பெய்திடாய்" என்று மழைபெய்ய நியமித்திருக்கிறாள். இவற்றைப் பார்க்கும்போது நீராடுவதற்கே ஆண்டாள் [அல்லது ஆய்ச்சிகள்] புறப்படுவதாகவும் நீராடுவதற்கே தோழிகளையும் அழைப்பதாகவும் நீராடுவதற்கு வேண்டிய தீர்த்தஸம்ருத்தி யுண்டாவதற்காகவே மழைபெய்ய மேகதேவதையை நியமிப்பதாகவும் தெரியவருகிறது. இதுவே உண்மைப் பொருளாகில் இவர்களெல்லாருங்கூடி ஒரு பொய்கைக்கரைக்குச் சென்றிருக்க வேண்டும். நீராடுமிடம் பொய்கையன்றோ. இவர்கள் ஒரு பொய்கைக்கரையில் சென்று சேர்ந்ததாகத் திருப்பாவையில் ஒருபாட்டிலுமில்லை. ஸ்ரீநந்தகோபருடைய திருமாளிகைக்குச் சென்று அங்கு * நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்பனை யுணர்த்தி நப்பின்னைப் பிராட்டியை யுணர்த்தி அவர்களைத் தோத்திரஞ் செய்து, சிற்றஞ் சிறுகாலை யெழுந்து இங்கு நாம்வந்தது எதற்காக வென்னில், * உன்றன்னோடுற்றோமே யாவோம் உனக்கே நாமாட் செய்வோ மென்று விண்ணப்

பம் செய்வதற்காகவே யென்று தலைக்கட்டியிருக்கிறார்கள். இப்படி திவ்ய தம்பதி களிடம் சென்று சேவிப்பதுதான் இவர்கள் தாம்கொண்ட மார்கழி நீராட்டமென்று நன்கு விளங்கிற்றாயிற்று. ஆகவே, * நீராடப்போதுவீர் * நாங்களும் மார்கழி நீராட* * குள்ளக்குளிரக்குடைந்து நீராடாதே * உக்கமுந் தட்டொளியும் தந்துன் மணாளனை இப்போதே யெம்மை நீராட்டு * மாலேமணி வண்ணா மார்கழி நீராடுவான் * என்கிற பாசுரங்களில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட நீராட்டமானது தண்ணீரில் தோய்வதன்று என்று தேறிற்று. இனி, பகவத் ஸம்ச்லேஷத்தையும் பாகவத ஸம்ச்லேஷத்தையும் ஆசார்யகுல அவகாஹனத்தையுமே நீராட்டமாகச் சொல்லிற்றென்று நிஷ்கர்ஷிக் கப் போதுமான ஔசித்யமுள்ளது. இதை மூவாயிரப்படியில் பெரியவாச்சான் பிள்ளையும், ஆறாயிரப்படியில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் ஸ்பஷ்டமாக விளக்கியேயுள்ளார்கள். 'நீராடப் போதுவீர்' என்ற விடத்துப் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தி வருமாறு—"[நீராட] இத்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ண ஸம்ச்லேஷம். தமிழரும் கலவியைச் சுனையாடலென்றார்கள். *ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ் டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம் * என்று பகவத்ஸம்ச்லேஷத்துக்கு க்ரீஷ்மகாலத்தில் குளிர்ந்த மடுவில் படிவதை த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற்றிறே" என்று. ஆறாயிரப் படி ஸ்ரீ ஸூக்தியுமிப்படியே. ஏவஞ்ச, மார்கழி நீராட்டமென்பது மார்கழி மாதத்திற் செய்யும் ஸ்நானமன்று என்பது சிக்கனக் குறிக்கொள்ளத்தக்கது. மார்க்க சீர்ஷமென்னும் வடசொல்லே மார்கழி யென்று விகாரப்பட்டதாதலால் பகவா னிடத்தில் சென்று சேர்வதற்கு உறுப்பான மார்க்கங்களில்—உபாயங்களில் எது சீர்ஷமானதோ [தலையானதோ], அதில் அவகாஹிப்பதுதான் மார்கழி நீராட்டமாகக் கூறப்படுவது. உபாயங்களில் தலையான உபாயம் எது வென்றால் "காலைநன் ஞானத்துறை படிந்தாடி" என்று (திருவிருத்தத்தில்) நம்மாழ்வாரருளிச் செய்தபடியே நன்ஞானத்துறையான ஸதாசார்ய ஸன்னிதியிலே அவகாஹிப்பதுதான். இதனிலும் மேம்பட்ட தொன்றுண்டு; அதாவது,

> "ஸ்வாபிமாநத்தாலே ஈச்வராபிமாநத்தைக் குலைத்துக் கொண்ட விவனுக்கு ஆசார்யாபிமாநமொழிய கதியில்லை என்று பிள்ளை பலகாலு மருளிச் செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும். ஸ்வஸ்வாதந்த்ர்யபயத்தாலே பக்தி நழுவிற்று. பகவத் ஸ்வாதந்த்ர்ய பயத்தாலே ப்ரபத்தி நழுவிற்று. ஆசார்யனையும் தான் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பமாகையாலே காலன்கொண்டு மோதிர மிடுமோ பாதி. ஆசார்யாபிமாநமே உத்தாரகம்."

என்கிற ஸ்ரீவசந பூஷண திவ்ய சாஸ்த்ர ஸர்வஸ்வமான ஆசார்யாபிமானம். அதில் படிந்து விட்டால் மகிழ்ச்சிக்குக் குறையேது? இந்த மகிழ்ச்சியே நாலாம் பாட்டில் "நாங்களும் மகிழ்ந்து மார்கழி நீராட" என்பதனை லுணர்த்தப் படுகிறது.

இப்பாட்டுக்காக மாலைமகுட மிட்டவர்கள் மகிழ்ச்சிமாலை யென்றோ, மகிழ்வு மாலை யென்றோ இடாமல் மகிழ்மாலை யென்று இட்டதனால் மகிழ்மாலை மார்பினரான நம்மாழ்வாரைப் பற்றி இப்பாட்டில் பேசவேணு மென்கிற கோரிக்கையும் தெரிந்து கொள்ளலாகிறது. இப்பாட்டில் "ஆழிமழைக்கண்ணா!" என்று [மேகமாக] விளிக்கப் படுபவர் நம்மாழ்வார் என்பதும் பொருந்தும். இதற்குச் சார்பாகப் பூருவர்கள் பணித்தவோர் அற்புதமான ச்லோகரத்னமும் இங்கே அநுஸந்திக்கத் தகும். அதாவது,

> "லக்ஷ்மீநாதாக்க்யஸிந்தௌ சடரிபுஜலதஃ ப்ராப்ய காருண்யநீரம்
> நாதாத்ராவப்யஷிஞ்சத் ததநு ரகுவராம்போஜசக்ஷுர்ஜ்ஜராப்யாம்
> கத்வா தாம் யாமுநாக்க்யாம் ஸரிதமத யதீந்த் ராக்க்ய பத்மாகரேந்த்ரம்
> ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி ஸததம் தேசிகேந்த்ரப்ரமௌகைஃ"

என்பதாம். இதன் பொருளாவது, நம்மாழ்வாராகிற காளமேகம் ச்ரிய: பதியென்னும் கடலிலே புக்குக் கருணையாகிற நீரை முகந்துகொண்டு ஸ்ரீமந் நாதமுனிகளாகிற மலை யுச்சியில் வர்ஷிக்க, அந்த மழை உய்யக் கொண்டார் மணக்கால் நம்பிகளாகிற இரண்டு அருவிகளாகப் பெருகி யமுனைத்துறைவர் (ஆளவந்தார்) என்னும் ஆற்றிலே தங்கி அங்குநின்றும் பெருகி எம்பெருமானாராகிற ஏரியிலே நிறைந்து, வீராணத் தேரியின் தீர்த்தம் எழுபத்து நான்கு மதகுவழியாகப் பெருகிப் பலவூர் வயல்களிலே பாயுமாபோலே எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதி பதிகளின் வழியாய் ஸம்ஸாரி சேதநர்கள் பக்கலிலே இடையறாது பெருகிக் கொண்டிருக்கின்றதென்கை. ஆக இப்படிப்பட்ட மேகம் வர்ஷிக்கப் பெற்றதனால் நாமெல்லோரும் மகிழ்ந்து மார்கழி நீராடப் பெறுகிறோம். .... ... .... .... .... (4)

## 5. பிழைமாயும் மாலை

ஐந்தாம் பாட்டில் 7, 8 அடிகளில் "போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்" என்றிருப்பதை நோக்கியது இம்மாலைப் பெயர். **[போய பிழையும் புகுதருவானின்றனவும் தீயினில் தூசாகும்]** ஆசார்ய ஸமாச்ரயணம் பெறுவதற்கு முன்னே நிகழ்ந்த பாபங்கள் போய பிழையாம். ஆசார்யனை யடிபணிந்த பின்பு புத்தி பூர்வமாகப் பாபங்கள் விளைவதற்கு ப்ரஸக்தி யில்லை. ப்ரக்ருதி ஸ்வபாவத்தாலும் ஸஹவாஸ தோஷாதிகளாலும் ப்ராமாதிகமாகச் சில பிழைகள் நேரும். அவை புகுதருவானின்ற பிழைகளாம். ஆக இருவகுப்பான அபசாரங்களும் தீயிலிட்ட தூசு போல் உருமாய்ந்தொழியு மென்கை.

"வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ் ஐயைந்துமைந்தும்" என்று ஆன்றோரருளிச் செய்தபடி திருப்பாவை யென்னுமிந்த திவ்யப்பிரபந்தமானது வேத மனைத்துக்கும் வித்தாகையாலே, "**தததிகம உத்தர பூர்வாகயோ ரச்லேஷவிநாசௌ தத்வ்யப தேசாத்**" என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தில் விளக்கப்பட்ட வேதாந்தவிழுப்பொருள் இங்கே நன்கு விளங்குமாறு காண்க. சாரீரக மீமாம்ஸையில் நான்காவது அத்யாயத்திலுள்ள அந்த ஸூத்ரம் வித்யையின் பலனைச் சொல்லுவதாம். கீழே வித்யாஸ்வரூபம் சோதிக்கப்பட்டது; இப்போது வித்யையின் பலன் சோதிக்கப்படுகின்றதென்று பாஷ்யகாரர் அவதாரிகை யிட்டருளியுள்ளார். ப்ரஹ்மவித்யையுணர்ந்த புருஷனுக்குப்பூர்வபாபங்களின் விநாசமும் உத்தரபாபங்களின் அலேபமும் உபநிஷத்துக்களில் ஓதப்படுகிறது. பூர்வபாபம், உத்தரபாபம் என்கிற நிர்தேசம் உபநிஷத்தில் இல்லை; ப்ரஹ்மஸூத்ரத்தில் தானுள்ளது. உபநிஷத்திலில்லாததை ஸூத்ரகாரர் எங்ஙனம் சொல்லுகிறாரென்னில்; இங்ஙனம் சொல்லும்படியாகவாயிற்று உபநிஷத் வாக்யமுள்ளது. கேண்மின்; "தத் யதா இஷீகதூலம் அக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே" என்னுமொரு உபநிஷத் வாக்யமானது பாபங்களின் விநாசத்தைக் கூறுகிறது. "யதா புஷ்கரபலாசே ஆபோ நச்லிஷ்யந்தே ஏவம்விதி பாபம் கர்ம நச்லிஷ்யதே" என்றும், "தஸ்யைவாத்மா பதவித் தம் விதித்வா, நகர்மணா லிப்யதே பாபகேந" என்றுமுள்ள உபநிஷத்வாக்யங்கள் ப்ரஹ்ம வித்தினிடத்தில் பாபங்கள் ஒட்டவேமாட்டா என்கின்றன. இவை ஒன்றோடொன்று சேராமலிருக்கின்றன; ஏனென்னில்; பாபங்கள் ஒட்டவேமாட்டா என்னும்படியானால் அவற்றுக்கு விநாசம் சொல்ல ப்ரஸக்தி ஏது? ஒட்டினாலன்றோ விநாசம் சொல்ல வடுக்கும். அஸங்கதமாக உபநிஷத்து ஓதாததலால், பாபங்கள் நசிக்குமென்ற ச்ருதி பூர்வபாப விஷயமென்றும், பாபங்கள் ஒட்டமாட்டா என்கிற ச்ருதி உத்தரபாப விஷயமென்றும் ஸூத்ரகாரரால் விஷய விபாகம் செய்யப்பட்டது. ப்ரஹ்மவித்யா ப்ராப்திக்கு முற்பட்ட பாபங்கள் நசித்தொழியும்; ப்ரஹ்மவித்யா

ப்ராப்திக்குப் பிறகு புத்திபூர்வகமாகப் பாபம் நேராது; நேர்ந்தால் அது வ தாமரை யிலையில் தண்ணீர் போலே ப்ரஹ்மவித்தினிடத்தில் ஒட்டவே மாட்டா—என்று விஷயம் வகுக்கப்பட்டதாகி ஸமஞ்ஜஸமாயிற்று.

சாஸ்த்ரங்களில் "நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடி சதைரபி" என்று சொல்லப்பட்டிருக்கிறது. கருமங்களின் பலனை அநுபவித்தே தீரவேணும்; வேறு விதமாகக் கருமம்தொலையாது; கல்பகோடி சதமானாலும் கருமபலாநுபவம் பண்ணியே யாகவேணும்—என்று சொல்லப்பட்டிருப்பதற்கு மாறாக பிழைகள் மாய்ந் தொழியுமென்று எங்ஙனே சொல்லலாம்? என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமானால்; ப்ரஹ்ம வித்யா மாஹாத்மியத்தினால் கூடுமென்று ஸித்தாந்தம் செய்யப்படுகிறது. *நாபுக்தம் க்ஷீயதே கர்ம* என்கிற சாஸ்த்ரத்துக்கும் உத்தரபூர்வ பாபங்களின் அச்லேஷ விநாசங்களைச் சொல்லுகிற சாஸ்த்ரத்துக்கும் பரஸ்பரவிரோதந்தானுமில்லை; கேண் மின்; ஒருவன் நெருப்பினுடைய பிரபாவத்தைப் பேசுகிறான்; மற்றொருவன் தண்ணீரி னுடைய பிரபாவத்தைப் பேசுகிறான். நெருப்புப் பற்றினால் வீடுவீடாக தஹித்தேவிடு மென்கிறான் முந்தினவன்; தண்ணீர் எப்படிப்பட்ட நெருப்பையும் அணைத்து விடு மென்கிறான் பிந்தினவன். இவற்றுக்கு ஏதேனும் பரஸ்பரவிரோத முண்டோ? தண்ணீரில்லாத விடத்தில் நெருப்புக்கு ப்ராபல்யமும், தண்ணீருள்ள விடத்தில் நெருப்புக்கு அகிஞ்சித் கரத்துவமும் சொல்லப்படுவது பொருத்தந்தானே. அதுபோல ப்ரஹ்மவித்யாப்ராப்தியில்லாத வ்யக்திகளிடத்தில் கர்மப்ராபல்யமும், அஃதுள்ள விடத்தில் கருமங்களுக்கு அகிஞ்சித்கரத்துவமும் தேறுமாயின் இதில் பொருத்த மின்மை யொன்றுமில்லையே. இத்தகைய வேதாந்தவிழுப்பொருளை, *போயபிழையு* மித்யாதி திவ்யஸூக்தி வெளியிட்டதென்க. .... .... .... (5)

## 6. குளிர்மாலை

ஆரும்பாட்டினீற்றடியில் "உள்ளம் புகுந்து குளிர்ந்து" என்றிருப்பதை நோக்கியது இம்மாலைக் குறிப்பு. இங்கு உள்ளம் குளிர்ந்ததாகச் சொல்லப்படுகிறது. எதனால் குளிர்ந்ததென்னில், அரியென்ற பேரரவம் உட்புகுந்ததனாலென்று சொல் லப்பட்டுளது. அரியென்ற பேரரவம் யாருடையதென்னில், முனிவர்களும் யோகி களுமானவர்களினுடையதென்று தெரிவிக்கப்பட்டிருக்கின்றது. முனிவர்களென் பதும் யோகிகளென்பதும் பரியாய நாமங்கள் போலவே தோன்றும்; ஸ்ரீமல்லக்ஷ் மண முநி: என்றாலும், ஸ்ரீமல்லக்ஷ்மண யோகீ என்றாலும் பொருளில் வாசியில்லையே; ஸ்ரீமத் வரவரமுநி: என்றாலும் ஸ்ரீமத் வரவரயோகீ என்றாலும் அப்படியே யன்றோ. வாசியற்றிருக்க, வாசியுள்ளதுபோல் சொல்லி யிருப்பதற்குப் பொருளென்? என்று பரிசீலிக்க வேணும் இத்தகைய சொற்செறிவு மற்றும் பலவிடங்களிலும் காணப் படுவதுண்டு; ஒன்றிரண்டிடங்களை யெடுத்துக் காட்டுகிறோம்; "வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணு ரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ." என்று பரமபதத்திலிருப்பைச் சொல்லுகிற பகவச் சாஸ்திர ச்லோகத்தில் "பக்தை: பாகவதைஸ் ஸஹ" என்றுள்ளது; பக்தர்களுக்கும் பாக வதர்களுக்கும் என்ன வாசி? திருவாய்மொழியில் *சூழ்விசும்பணி முகிற்பதிகத்தில் "வைகுந்தத் தமரரும் முனிவரும் வியந்தனர்" என்றருளிச் செய்யப்பட்டது. அமரரும் முனிவருமாகிற வாசி எதனால்? கேண்மின்; பகவத் ப்ரவணர்களில் இரு வகுப்புண்டு; குணாநுபவ நிஷ்டர்களென்றும் கைங்கர்ய நிஷ்டர்களென்றும். இளையபெருமாள் போல்வார் கைங்கர்ய நிஷ்டர்கள்; பரதாழ்வான் போல்வார் குணாநுபவ நிஷ்டர்கள். ஆக இந்த வாசியைப்பற்றவே ஆங்காங்கு இரண்டு சொற் களை யிட்டுச் சொல்லுவது. *முனிவர்களும் யோகிகளுமென்ற இவ்விடத்தும் இவ்விரு வகுப்பினர்களே விவக்ஷிதர்களாகக் கடவர்கள். இவர்கள் ப[illegible]ரியை விட்

டெழுந்திருக்கும்போது அரியரியரி யென்று உத்கோஷித்துக் கொண்டே யெழுந் திருக்கின்றார்களாம். அரி என்னுஞ் சொல்லுக்கு மூன்று பொருள்கள் ப்ரஸித்த மானவை; தென்மொழியில் ஹகாரம் கிடையாததலால் ஹரியென்ற வடசொல் அரியெனத் திரியும். பத்துப் பொருள்களையுடைய அந்த வடசொல்லுக்கு நாராயண னென்ற பொருளும் சிங்கமென்ற பொருளும் திவ்யப் பிரபந்தங்களில் ப்ரஸித்தமாக உள்ளன. அரி: என்றே ஒரு வடசொல் உண்டு. அதற்கு விரோதி யென்று பொருள். திருப்பல்லாண்டில் "அந்தியம் போதிலரியுருவாகி அரியை யழித்தவனை" என்ற விடத்து முதலிலுள்ள அரி சிங்கமென்ற பொருளிலும், இரண்டாவதாகவுள்ள அரி விரோதியென்ற பொருளிலும் பிரயோகிக்கப் பட்டிருப்பது காண்க. *அரியென்ற பேரரவ மென்ற விவ்விடத்து மேலே காட்டின முப்பொருளும் விவக்ஷிதமே. சிலர் நாராயணனை விவக்ஷித்து ஹரியென்பர்கள்; சிலர் *அசோதையிளஞ் சிங்கத்தை விவக்ஷித்து ஹரியென்பர்கள்; சிலர் விரோதியை [அதாவது, விரோதி நிரஸநத்தை] விவக்ஷித்து அரியென்பர்கள். குணாநுபவநிஷ்டர்கள் "ஹரிர் ஹரதி பாபாநி" என்கிறபடியே பாபஹரத்வம் முதலான திருக்குணங்களைச் சிந்தை செய்து கொண்டும், அசோதை யிளஞ் சிங்கம் *காட்டை நாடித் தேனுகனும் களிறும் புள்ளு முடன் மடிய வேட்டையாடி வரும் சௌர்ய வீர்ய பராக்ரமங்களைச் சிந்தை செய்து கொண்டும் எழுந்திருப்பர்கள். கைங்கர்ய நிஷ்டர்கள் *மற்றை நங்காமங்கள் மாற் றென்கிற விடத்தில் கழிக்கப்படுகிற விரோதி தலைகாட்டாதிருக்கவேணுமே யென்று விரோதியைப் பற்றின சிந்தனையோடு எழுந்திருப்பர்கள். ஸ்வரூப விரோதி யென்றும் உபாயவிரோதி யென்றும் ப்ராப்ய விரோதியென்றும் விரோதிகள் மூவகைப்பட்டிருக்கும். ஸ்வரூப விரோதியும் உபாய விரோதியும் லேசாகக் கழிந்து விடும். ப்ராப்ய விரோதி கழிவது மிகவுமரிது. ஸ்தோத்ர ரத்னத்தில் "கதாஹ மைகாந்திக நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி என்று ஆளவந்தாரருளிச் செய்தவிடத்தில் உய்த்துணரவேண்டிய மஹார்த்தமிது. இதை மேலே (29) காமங்கள் மாற்று மாலை என்ற விடத்து இன்னமும் விவரிப்போம். ஆக இவ்வர்த்த விசேஷங்கள் ஸ்புரிக் கும்படி உச்சரிக்கப்படுகிற அரியென்ற பேரரவம் உட்புகுந்தால் உள்ளம் குளிரா திருக்க வழியுண்டோ? கமர்பிளந்த விடத்தே ஒரு பாட்டம் மழைபொழிந்தாற் போலே குளிர்ச்சி மிக்கிருக்கு மத்தனையிறே. .... .... .... (6)

## 7. தேசமாலை

ஏழாவது பாட்டினீற்றடியில் *தேசமுடையாய்* என்றதை நோக்கியது இந்த மாலைக் குறிப்பு. தேசம் என்றொரு தமிழ்ச்சொல் கிடையாது. தேஜஸ்ஸென்கிற வட சொல் தேசு என்றும் தேசம் என்றும் திரியும். ஜநபதவாசகமான தேசமென்னும் வடசொல்லும் தேசமெனத் தற்சமமாகும். இருபொருளும் இங்கு விவக்ஷிதமே. தேஜஸ்ஸென்னும் பொருளை முன்னம் விவரிப்போம். (1) விலக்ஷணவ்யக்திகளிடத் திலே "ரூபமேவாஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே" என்று வேதமோதின கணக்கிலே முகத்திற்காணும் ப்ராஹ்ம வர்ச்சஸ்ஸுடைமை சொன்னபடி. "ப்ரஹ்ம வித இவ தே ஸோம்ய! முகம் பாதி" என்ற உபநிஷத்வாக்யமும் இங்குக் கூட்டிக் கொள்ளத்தகும். (2) பகவாந் என்கிற திருநாமத்திற்கு ஷாட்குண்ய முடையவனென்று பொருள். "ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம் பலமதுல மைச்வர்யமகிலம் விமர்யாதம் வீர்யம் வரத! பரமா சக்திரபிச. பரம் தேஜச் சேதி ப்ரவர குணஷட்கம்" [வரதராஜஸ்தவே.] என்று கூரத்தாழ்வானருளிச் செய்தபடியே ஜ்ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு என்கிற ஆறு குணங்களுக்கு ஷாட்குண்யமென்று பெயர். இவற்றுள் தேஜஸ்ஸும் சேர்ந்தது. தேஜஸ்ஸாவது இன்னதென்பதை பட்டர் விவரித்தருளு மிடத்து "ஸஹகார்யபேக்ஷமபி ஹாதுமிஹ ததநபேக்ஷகர்த்ருதா, ரங்கதந! ஜயதி தேஜ இதி." என்றருளிச் செய்தார். அஸஹாயசூரத்வமே தேஜஸ்ஸென்றதாயிற்று.

இப்பாட்டிலுணர்த்தப்படுகிற வ்யக்திவிசேஷத்தினிடத்தில் இக்குணமுமுள்ளதாகச் சொல்லிற்றாயிற்று. ஏகாகியாயிருந்து கரதூஷணாதிகளான பதினாலாயிரம் அரக்கர்களை அவலீலையாக மாய்த்தொழித்த சக்ரவர்த்தி திருமகனாரை வேதாந்ததேசிகன் ரகு வீரகத்யத்தில் அஸஹாய சூர! என்று விளித்தார். அப்படிப்பட்ட போர்வல்லமையன்று இங்கு விவக்ஷிதம்; தத்வஹித புருஷார்த்தங்களை உபபத்தி மிக்கதாக ஸ்தாபிக்கும் வாதப்போரில் அஸஹாய ஸாமர்த்தியத்தைச் சொன்னபடியாம்.

பெரிய திருவந்தாதியில் நம்மாழ்வார் "உண்ணாட்டுத் தேசன்றே" என்கிற பாட்டில் ஒரு விலக்ஷணமான தேஜஸ்ஸை யருளிச்செய்கிறார்; அதற்கு உண்ணாட்டுத் தேசு என்று திருநாமம் சாற்றினர்; 'பரமபதத்துத் தேஜஸ்ஸு' என்பது பொருள். அதுதான் எது வென்னில்; "மண்ணாட்டிலாராகி எவ்விழி விற்றாலும் ஆழியங்கைப் பேராயற்கு ஆளாம் பிறப்பு—உண்ணாட்டுத் தேசன்றே" என்றுள்ளது பாசுரம். (கருத்து.) எவ்வகையான இழிகுலத்திற் பிறந்தவர்களானாலும் எவ்வகையான நடத்தைகளையுடையவர்களானாலும் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலாகிற ஒரு நலம் உள்ளதாகில் அப்படிப்பட்டவர்களுடைய பிறப்பு நித்யஸூரிகளின் திருமேனிபோலே மிக்கதேஜஸ்ஸை யுடையதேயாம் என்கை. ஆசார்யஹ்ருதயத்தில் (81.) "பண்டை நாளிற் பிறவி உண்ணாட்டுத் தேசிறே" என்ற ஸ்ரீஸூக்தியும் இங்கே இணக்கத்தக்கது. **பண்டைநாளிற் பிறவி** யென்பது ஒரு ஸங்கேதவ்யபதேசம். திருவாய்மொழியில் (9-2.) *பண்டைநாளாலே* என்கிற பதிகத்தில் "பல்படிகால் குடிகுடி வழி வந்தாட்செய்யும் தொண்டர்" "உன் பொன்னடிக்கடவாதே வழி வருகின்றவடியர்" "தொல்லடிமை வழிவருந்தொண்டர்" என்று சொன்னபடியே அடிமைக்கு இடையூறான ஜன்மாதிகளால் வரும் அபிமானமின்றிக்கே கைங்கர்யாநுரூபமான குடிப்பிறவி "ஆழியங்கைப் பேராயற்காளாம் பிறப்பு—உண்ணாட்டுத் தேசன்றே" என்கிறபடியே பகவத் விமுகர் நிறைந்து புறநாடான லீலாவிபூதி போலல்லாமல் அவனுக்கு அந்தரங்கமாயிருக்கிற பரமபதத்துத் தேஜஸ்ஸை யுடையதன்றோ என்பது மேலே யெடுத்துக்காட்டின ஸ்ரீஸூக்தியின் கருத்து. ஆக, இத்தகைய தேஜஸ்ஸு பொலிந்த திருமேனியையுடைய வ்யக்திவிசேஷமும் இப்பாட்டினால் உணர்த்தப்படுகின்றதென்று கொள்ளலாம்.

இனி, ஜநபதவாசகமான தேச சப்தமாகக் கொண்டால் ஸகலதேசங்களையும் தன்கையிலே யுடைமை சொல்லிற்றாகும். ஸகலதேசங்களுமென்பதில் உபயவிபூதியுமடங்கும். "பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ" என்று ஆழ்வாரருளிச் செய்தது உபயவிபூதியும் தாமிட்ட வழக்கு என்னும் அத்யவஸாயத்தாலன்றோ. *அருளார் திருச் சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்* என்றும், *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்ற வெம்பெருமான்* என்றும் உபயவிபூதி நிர்வாஹகனைச் சொல்லப்பட்ட எம்பெருமான் *தம்மையே யொக்க அருள்செய்யுங்கணக்கிலே சில வ்யக்திவிசேஷங்களிடத்திலே அந்த நிர்வாஹத்தை ஒப்படைப்பதுண்டாகையாலே அத்தகைய வொரு வ்யக்திவிசேஷத்தை இங்கு விளித்தபடியாம். ஆக, **தேசமுடையாய்!** என்றது உபய தேசவாஸிகளையும் தன்கையிலேயுடையாய்! என்றதாயிற்று. ஸ்வாமி ராமாநுஜர்க்கு உடையவர் என்ற திருநாமமும் இப்பொருளதே.

## 8. அருள்மாலை.

எட்டாம் பாட்டின் ஈற்றடியில் *ஆவாவென்றாராய்ந்தருளென்றதை நோக்கியது இந்த மாலைக்குறிப்பு. தேவாதி தேவனை நாம் சென்று சேவித்தால் (அவன்)

ஆராய்ந்து ஆவாவென்றருளும் என்று இங்குள்ளது. வடமொழியில் (ஹாஹா) என்கிற அவ்யயச் சொல்தொடர் தமிழில் ஆவாவென்று திரிந்தது. தமிழில் ஹகாரம் கிடையாதாதலால் (ஹா) என்பது ஆவென்றாகும். எனவே ஹாஹா வென்று அருள் செய்வன் என்றதாயிற்று. ஸந்தோஷம் மிக்கபோதும் ஹாஹா என்பதுண்டு; ஸங்கடம் மிக்க போதும் ஹாஹா என்பதுண்டு. ஐயோ! என்பது போலவாமிது. திருப்பாணாழ்வார் பெரிய பெருமாளை ஆனந்தமாக ஸேவித்தபோது "நீலமேனி ஐயோ! நிறை கொண்ட தென்னெஞ்சினையே" என்றும், "செய்யவாய் ஐயோ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே" என்றும் பேசினவிடங்களில் ஐயோ வென்றது ஸந்தோஷாதிசயத்தைக் காட்டுவதன்றோ. இனி, ஸங்கடத்தில் ஐயோவென்பதற்கு நாம் உதாரணம் காட்டவேண்டுமோ? உலகில் ஐயோ வென்பதெல்லாம் சங்கடத்தில்தானே. ஆக, இங்கு எம்பெருமான் ஹாஹா வென்றருள்வன் என்றது ஸந்தோஷத்தினாலுமாம்; ஸங்கடத்தினாலுமாம். என்னவென்று ஸந்தோஷ மென்னில்; இவ்வாயர் சிறுமிகள் குளிருக்கு அஞ்சியும் கோபாலக்கிழவர்களுக்கு அஞ்சியும் இடத்தைவிட்டுப் பெயராமல் கிடந்துறங்க வேண்டியிருக்க, இங்ஙனே சிற்றஞ்சிறு காலையில் எழுந்து பதறியோடி வந்தது ஆற்றாமையின் கனத்தாலன்றோ? இவர்களுடைய பக்திதான் என்னே! *ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி:, நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே* என்று மிகவரிதாகச் சொல்லப்பட்ட பக்தி இவர்களுக்கு இவ்விளமையில் அநாயாஸமாகக் கிடைத்தபடி என்னே! நம்முடைய பிரிவுக்கு ஆற்றமாட்டாமல் இவர்கள் என்ன பாடுபடுகிறார்கள்! *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்று 'ஒரு வ்யக்தி பெறுதற்கரிது' என்று நாம் சொல்லியிருக்க, இத்தனை வ்யக்திகள் எளிதாகக் கிடைப்பதே! ஹாஹா! என்ன ஆச்சரியம்! என்ன அதிசயம்! என்று எம்பெருமானுக்கு ஸந்தோஷமுண்டாகும். ஆக, நாம் சென்று சேவித்தால், ஆராய்ந்து— நம்முடைய பக்திப்பெருங்காதலை ஆராய்ந்து பார்த்து, ஆவாவென்று அருள்வன்— ஸந்தோஷாதிசயங்காட்டி க்ருபைபண்ணுவன் என்றதாயிற்று.

இனி, ஸங்கடப் பொருளையும் விவரிப்போம். சக்ரவர்த்தி திருமகன் தண்டகாரணியத்திற்கெழுந்தருளியபோது மஹர்ஷிகளின் ஆச்ரமங்களில் தானே சென்று அவரவர்கள் அரக்கர்களால் பட்ட நலிவுகளை விசாரித்து ஈரக்கையாலே அவர்களைத் தடவிக் கொடுக்கவேணுமென்றும் அவர்களுக்கு அபயப்ரதானம் பண்ணியருளவேணுமென்றும் (பெருமாள்) நினைப்பிட்டிருக்க, முந்துறமுன்னம் அந்த மஹர்ஷிகள் தாமே பெருமாளுடைய பர்ணசாலையேறத் திரண்டோடிவந்து படுகாடு கிடக்க, அதைக் கண்ட பெருமாள் தாம் பெரிய அபராதம் செய்து விட்டதுபோல வருத்தங்கொண்டு "ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா, யதீத்ருசை ரஹம் விப்ரை: உபஸ்தேயை ருபஸ்தித:" என்று, அஞ்ஜலி பந்தத்துடனே 'மஹர்ஷிகாள்! என்னுடைய மஹத்தான அபராதத்தை நீங்கள் க்ஷமித்தருளவேணும்; எனக்கு வாசாமகோசரமான வெட்கத்தை யுண்டாக்கிவிட்டீர்களே! உங்களிடந்தேடி நான்வரவேண்டியிருக்க, என்னிடந்தேடி நீங்கள் வந்தது தகுதியன்றே; என்னைப் பெரிய குற்றவாளனாக்கி விட்டீர்களே! இக்குற்றத்தை நீங்கள் பொறுத்தே யாகவேண்டும்' என்றார். அவ்வாறாக, 'பெண்காள்! நீங்கள் மிகவும் சிரமப்பட்டு இவ்வளவும் வந்தீர்களே; உங்களிருப்பிடம் தேடிவந்து உங்களை நோக்குகை யன்றோ எனக்குக் கடமை; அது மாறாடி விட்டதே! என்று ஸங்கடம் தோற்றப் பேசுவன் கண்ணபிரானும். பரகதஸ்வீகாரத்தாலே பேறு என்றிருக்க வேண்டியது ப்ராப்தமாயிருக்க, ஸ்வகத ஸ்வீகாரத்திலேயிழிந்தால் எம்பெருமானுடைய திருவுள்ளம் புண்படும் என்கிற சாஸ்த்ரார்த்தம் இப்பொருளில் விளங்குமாயிற்று. .... .... (8)

# 9. திருநாமமாலை

ஒன்பதாம் பாட்டின் ஈற்றடியில் "நாமம் பலவும் நவின்று" என்றிருப்பதை நோக்கியது இப்பாசுர மாலைக் குறிப்பு. முன்னடியில் "மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று" என்றருளிச் செய்திருத்தலால் ப்ரக்ருதத்தில் உத்தேச்யமான திருநாமங்கள் இன்னின்னவை யென்பது ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்ட தாயிற்று. மாமாயன் மாதவன் வைகுந்தன் என்கிற திருநாமங்கள் எம்பெருமானுக்கும் ஆசார்ய னுக்கும் பொதுவானவை. பாட்டுத்தோறும் பகவத் பரமான அர்த்தம் போலவே ஆசார்யபரமான அர்த்தமும் பொதிந்திருக்கையாலே ஆண்டாள் திருவுள்ளத்திற்குச் சேர இரு பொருள்களையும் விவரிப்போம். முன்னம் பகவத் பரமான பொருள் கேண்மின். [மாமாயன்.] மஹத்தான மாயையை யுடையவன். பகவத் கீதையில் * அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநா மீச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ் டாய ஸம்பவாமி ஆத்ம மாயயா * என்ற விடத்து பாஷ்யத்தில் ஸ்வாமி யெடுத்துக் காட்டியுள்ள "மாயா வயுநம் ஜ்ஞாநம்" என்கிற நிகண்டின்படி மாயையாவது ஸங்கல் பம். ஸங்கல்ப மாத்திரத்தாலே ஸகலத்தையும் நிர்வஹிப்பவன் என்றபடி. அதவா, அந்த கீதையிலேயே "தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" என்று, ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கப் போகாதாப் போலே பகவான் தான் ஒரு மாயப் பிணை பிணைத்து வைத்திருக்கையாலே அதைச் சொல்லிற்றாகவு மாம். அன்றிக்கே மிகவும் ஆச்சரியமான குண சேஷ்டிதங்களை யுடையவனென் னவுமாம். "அது விதுவுது என்னலாவனவல்ல என்னையுன் செய்கை நைவிக்கும்" என்று ஆழ்வாரீடுபடும்படியான அவற்றைச் சிறிது கேண்மின்; *பொத்த வுரலைக் கவிழ்த்து அதன் மேலேறித் தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயு முண்பது, * கன்றுகளோடச் செவியில் கட்டெறும்பு பிடித்திடுவது, * வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடை யிட்டு அதனோசை கேட்டு நிற்பது, புண்ணில் புளிப் பெய்தா லொக்குந் தீமைகளை மனை தோறுஞ் சென்று செய்வது, உருகவைத்த குடத்தொடு வெண்ணெய் உறிச்சியுடைத் திட்டுப்போந்து அருகிருந்தார் தம்மை அநியாயஞ் செய்வது, இல்லம் புகுந்தொருமகளைக் கூவிக் கையில வளையைக் கழற் றிக்கொண்டு கொல்லையில் நின்றுங் கொணர்ந்து விற்ற அங்கொருத்திக்கு அவ்வளை கொடுத்து நல்லன நாவற் பழங்கள் கொண்டு நானல்லே னென்று சிரிப்பது, ஆற்றிலிருந்து விளையாடுபவர்களைச் சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு காற்றில் கடியனா யோடி யகம்புகுவது, வண்டமர் பூங்குழலார் துகில் கைக்கொண்டு விண்டோய் மரத்தேறுவது, மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்குக் கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலும் தீமைகள் செய்வது, தாயெடுத்த சிறு கோலுக்கு உளைந்தோடுவது, ஒளியா வெண்ணெ யுண்டானென்று உரலோடாய்ச்சி ஒண் கயிற்றால் விளியா வார்க்க வாப்புண்டு விம்மி யழுவது, கஞ்சனுங் காளியனுங் களிறு மருது மெருதும் வஞ்சனையில் மடிய வளர்வது, ஆயனாகி ஆயர் மங்கை வேய தோள் விரும்பியது, குன்றெடுத்தா நிரைகாத்துக் கோவலனாய்க் குழலூதி யூதிக் கன்றுகள் மேய்த்துத் தன் தோழரோடு கலந்து வருவது, சீமாலி கனவனோடு தோழமைக் கொண்டு சாமாறவனை யெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டது, நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத் தேறியவளும் திருவுடம்பிற் பூச ஊறிய கூனினை உள்ளே யொடுங்க ஏறவுருவியது, வார்கடாவருவி யானை மாமலையின் மருப்பிணைக் குவடிறுத்துருட்டி ஊர்கொள் திண்பாக னுயிர்செகுத்து அரங்கின் மல்லரைக் கொன்று போர் கடாவரசர் புறக்கிட மாடமீமிசைக் கஞ்சனைத் தகர்த்தது, பொய்ச் சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்ப் பாரதங்கை செய்தது, பற்றலர் வீயக்கோல் கையில் கொண்டு மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன்தன் தேர் முன்

நின்றது, பாழியால் மிக்க பார்த்தனுக் கருளிப் பகலவனொளிகெட ஆழியாலன்றங் காழியை மறைத்தது, கொல்லாமாக் கோல் கொலை செய்து பாரதப்போர் எல்லாச் சேனையு மிருநிலத் தவித்தது, மாதவத்தோன் புத்திரன்போய் மறி கடல்வாய் மாண் டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தது, படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனு முடனேறத் திண்டேர் கடவிச் சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதி யில் வைதிகன் பிள்ளைகளை உடலொடுங் கொண்டு கொடுத்தது முதலான மாமாயச் செயல்களை யநுஸந்திப்பது. மாதவனென்பதற்கு லக்ஷ்மீபதியென்னும் பொருளும், வைகுந்தனென்பதற்கு வைகுண்டபதி யென்னும் பொருளும் உலகறிந்ததே.

இனி இம்மூன்று திருநாமங்களுக்கும் ஆசார்ய பரமான பொருள் கேண்மின். [மா மாயன்] எம்பெருமான் செய்யு மற்புதச் செயல்களிற் காட்டிலும் ஆசாரியர் செய்யு மற்புதச் செயல்களே மேம்பட்டவை. இராமாநுச நூற்றந்தாதியில் ஒரு பாசுரமே இங்குப் போதும்; "பார்த்தானறு சமயங்கள் பதைப்ப, இப்பார் முழுதும் போர்த்தான் புகழ்கொண்டு. புன்மையினேனிடைத்தான் புகுந்து தீர்த்தானிருவினை, தீர்த்து அரங்கன் செய்ய தாளிணையோடார்த்தான், இவை யெம்மிராமாநுசன் செய்யுமற்புதமே." என்னுமிப் பாசுரத்தில் ஆசார்யஸர்வபௌமருடைய அற்புதச் செய்கைகள் அத்புதமாகச் சொல்லப்பட்டிருப்பது காண்க. இப்பாட்டுக்கு நமது விரிவுரை நோக்கத் தக்கது. [மாதவன்] இப்போது லக்ஷ்மீபதி யென்று பொரு ளன்று. மஹா தபஸ்வி யென்று பொருள். மா—பெரிய, தவன்—தவத்தை யுடையவன். தைத்திரீயோப நிஷத்தில் "ஸத்ய மிதி ஸத்யவசா ராதீதர:" என்று தொடங்கி தபஸ்ஸின் அர்த்தத்தை இருவர் வாக்காலே இரண்டு படியாகச் சொல்லி, முடிவாக "ஸ்வாத்யாய ப்ரவசநே ஏவேதி நாகோ மௌத்கல்ய:; தத்தி தபஸ் தத்தி தப:" என்று தலைக்கட்டியுள்ளபடியே ஸ்வாத்யாய ப்ரவசநங்களே தபஸ்ஸாகை யாலே தந்நிரதர் என்றபடி. [வைகுந்தன்] "தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேச காங்க்ஷீ" என்கிற ந்யாஸதிலக ஸூக்திப்படியே வைகுண்ட ப்ரதாயகனென்றபடி. ஆசார்யருடைய அநுமதியின்றி ஸர்வேச்வரன் திருநாடு தருவதில்லையாதலால் ஆசார்யனையே வைகுண்ட ப்ரதனாகச் சொல்லத் தட்டில்லை. ஆக எம்பெருமானுக்கும் ஆசாரியர்க்கும் ஸாதாரணமான திருநாமங்களை நவின்றதாயிற்று. .... (9)

## 10, தேற்றமாலை.

பத்தாம் பாட்டின் ஈற்றடியில் "தேற்றமாய்வந்து திற" என்றதை நோக்கியது இப்பாசுரமாலைக் குறிப்பு. தேற்றமாவது தெளிவு. தெளிவாய் வந்துதிற வென்கை. திருநெடுந்தாண்டகத்தில் (21) "இருவராய் வந்தார்" என்றவிடத்து இருவராம்படி வந்தாரென்று வியாக்கியானம் செய்தருளப்பட்டிருப்பதுபோல இங்கும் தேற்றமாய் என்பதற்கு தேற்றமாகும்படி யென்று பொருள கொள்ளத்தக்கது. இப்பாட்டி லுணர்த்தப்படுகிற பெண்பிள்ளை மிகத்தெளிவுடைய வ்யக்தியென்னுமிடம் "நோற்றுச் சுவர்க்கம் புகுகின்றவம்மனாய்!" என்கிற விளியினாலும் அருங்கலமே! யென்கிற விளியி னாலும் விளங்கா நின்றது. எங்ஙனேயென்னில்; பேற்றுக்கு ஒருஸாதநாநுஷ்டானம் பண்ணவேணுமென்றும், என்னஸாதனத்தை யனுஷ்டிக்கலாமென்றும் சிந்தித் திருக்கும் நிலை தெளிவில்லாத நிலையாகும். "தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தா:" என்றும் "செய்தவேள்வியர்" [திருவாய்மொழி 5-7-5.] என்றும் சொல்லுகிறபடியே க்ருதக்ருத்யராயிருக்கும் நிலை தெளிந்த நிலையாகும். "சாஸ்த்ரிகள் தெப்பக்கையரைப்போலே இரண்டையுமிடுக்கிப் பிறவிக்கடலை நீந்த, ஸாரஜ்ஞர் விட்டத்திலிருப்பாரைப்போலே இருகையும்விட்டுக் கரைகுறுகுங்கால மெண்ணு வர்கள்" என்னுமாசார்ய ஹ்ருதய சூர்ணையும் அதன் வியாக்கியானமுங் கொண்டு

இதில் தெளிவு பெறவேணும். ஸ்வப்ரவ்ருத்தியானது பகவத்ப்ரவ்ருத்தி விரோதி யென்றறுதியிட்டு, அப்படி பகவத் ப்ரவ்ருத்தி விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியில் நின்றும் கையொழிந்து நிற்கும் நிலையுண்டே இதுவேதான் தெளிந்தநிலை யெனப்படும். "சசால சாபஞ்ச முமோச வீர:" என்னும் ஸ்ரீராமாயண ச்லோகத்தில் *சாபஞ்ச முமோச * என்பதற்கு முற்பட்ட நிலையைக் கலங்கின நிலையாகவும்; *கச்சாநு ஜாநாமி* என்று பெருமாள் திருவுள்ளமிரங்குகைக் குறுப்பாக *சாபஞ்ச முமோச* என்றிருந்த நிலையைத் தெளிந்த நிலையாகவும் நிரூபிப்பர்கள் நம் ஆசாரியர்கள். த்ரௌபதியினுடைய அனுஷ்டானத்தையும் ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய அனுஷ்டானத்தையும் ஆராய்ந்து தெளியவேணும். த்ரௌபதி தன் அபிலஷித ஸித்திக்கு உறுப்பாக என்ன செய்தாளென்று பார்க்கில், ஒன்றும் செய்திலள்; "இருகையும் விட்டேனோ த்ரௌபதியைப்போலே" என்கிறபடியே, மிக்க பெருஞ்சபை நடுவே தான் படும்பரிபவத்திற்குப் பரிஹாரமாகப் புடவையை இறுக்கிக் கொண்டிருந்தமையாகிற ப்ரவ்ருத்தி நிலையை விட்டுத்தொலைத்ததுண்டே இதுதான் த்ரௌபதி செய்தது. கஜேந்திராழ்வானும் "கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே" என்கிறபடியே முதலை நீருக்கிழுக்க, தான் கரைக்கு இழுத்துக் கொண்டிருந்தமையாகிற ப்ரவ்ருத்தி நிலையில் நின்றும் கையொழிந்தமை யத்தனையே யாயிற்று செய்தது. அஷ்டச்லோகியில் "ஆத்மத்ராணோந்முகச் சேத் நம இதி ச பதம்" என்று பட்டரருளிச் செய்தபடியே ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் ஸ்வரூப விருத்த மென்கிற துணிவு ஹ்ருதய பூர்வகமாக [அநுஷ்டாந பர்யவஸாயியாக] வுண்டானால் இதனில் மிக்க தெளிவு வேறில்லையாம். "நோற்றுச் சுவர்க்கம் புகுகின்றவம்மனாய்!" என்பதற்கு—செய்யவேண்டியதைச் செய்துமுடித்து ப்ரஹ்மானந்தாநுபவம் செய்து கொண்டிருக்கிறவளே! என்பது பொருள். உண்மையில் இவ்வதிகாரிக்கு செய்யவேண்டியதென்று ஒன்று இருந்தாலன்றோ அதைச் செய்து முடித்ததாவது. கீழே உபபாதித்த அத்யவஸாய விசேஷத்தாலே ஸித்திக்கிறதாயிற்று க்ருத க்ருத்யத்வம். *தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தா:* என்றதும் *செய்த வேள்வியர் * என்றதும் அதையிட்டேயன்றோ. ஸாத்யோபாய நிஷ்டர்களன்றிக்கே ஸித்தோபாய நிஷ்டராயிருக்குமவரைச் சொன்னவாறு. தொண்டரடிப்பொடியாழ்வார் *காம்பறத் தலைசிரைத்து உன் கடைத் தலையிருந்துவாழுஞ் சோம்பர்* என்றருளிச் செய்தது இத்தகைய அதிகாரியையே யன்றோ, அருங்கலமே! என்றது தூர்லபமான ஸத்பாத்ரமே! என்றபடி. இத்தகைய நிஷ்டை எளிதன்றே. மிகவுமரிதானதொன்றே. பெறுதற்கரிய நிஷ்டையைப் பெற்ற ஸத்பாத்ரமே! என்ற விது மிக அவசியமான விளியாகும். உனக்குண்டான தெளிவு எமக்கு முண்டாம்படி வந்து வாயைத் திறந்தருளவேணு மென்றதாயிற்று. 10

## 11. பொருள் மாலை

பதினோராம் பாட்டினீற்றடியில் "எற்றுக் குறங்கும் பொருள்" என்றிருப்பதை நோக்கியது இப்பாசுரமாலைக் குறிப்பு. இத்தனை சிறுமிகள் நாங்கள் உணர்ந்து வந்து திரண்டு நிற்க நீ மட்டும் உறங்குகைக்குப் பொருளென்ன? என்று கேட்கப்படுகிறதிங்கு. பொருளாவது அர்த்தம். உறங்குகைக்கு என்ன அர்த்தம் என்றது, என்ன பிரயோஜனத்திற்காக நீ உறங்குகிறாய்? என்றபடி. உலகத்தில் உறங்குகிறவர்கள் ஒரு பிரயோஜனத்திற்காகவா உறங்குகிறார்கள்; இல்லையே. அப்படியிருக்க இக்கேள்வியின் கருத்து என்ன? என்று ஆராய வேணும். ஆராய்வோம். ஸம்ஸாரிகளின் உறக்கம் தமோ குணத்தினாலாயது. * வெள்ளை வெள்ளத்தின் மேலோரு பாம்பை மெத்தையாக விரித்து அதன் மேலே கண் வளர்ந்தருளுமவனுடைய நித்திரை ஜகத்ரக்ஷண சிந்தையினாலாயது. நங்காய்! உன்னுடைய நித்திரை எதனாலாயது? என்று கேட்கிறார்களென்க. ஆங்காங்கு திவ்ய தேசங்

களில் எம்பெருமான் துயில் கொள்ளும்படியை அநுபவிக்கின்ற ஆழ்வார்கள் "நடந்த கால்கள் நொந்தவோ? நடுங்க ஞாலமேனமாய், இடந்த மெய்குலுங்கவோ விலங்கு மால் வரைச்சுரம், கடந்த கால் பரந்த காவிரிக் கரைக் குடந்தையுள் கிடந்தவாறு" என்றும், ' கொடியார் மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்னே நீ துயில் மேவி மகிழ்ந்தது தான், அடியாரல்லல் தவிர்த்த வசவோ? அன்றே லிப்படி தான் நீண்டு தாவிய வசவோ பணியாயே" என்றும் வினவுகின்றார்கள். திருப்பாவையில் உணர்த்தப்படுகிறவர்கள் உத்தமாதிகாரி களாகையாலே இவர்கள் உறங்க ப்ரஸக்தி யேயில்லை. * தொல்லை மாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலே யென்கையாலே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை; கண்டால் *ஸ்தாபச்யந்தி யாகையாலே உறக்கமில்லை யென்கிறார் பிள்ளை யுலகாசிரியர். இந்நிலத்தில் பிறந்தவர்களுக்கு நித்திரை அவர்ஜநீய மென்று கொண்டாலும் க்ருஷ்ண குணநுபவத்தி லீடுபட்ட திருவாய்ப்பாடிப் பெண்கள் ப்ராஹ்ம முஹூர்த் தத்திலே அதிலும் மார்கழி மாதத்திலே கிடந்துறங்குகை ஸர்வாத்மநா அஸம்பாவிதம். ஆனாலும் பாசுரந்தோறும் உறங்குவதாக வைத்து எழுப்புகை காணப்பட்டு வருகின்றது. இதற்கொரு பொருள் சொல்லியாக வேண்டும். "எற்றுக் குறங்கும் பொருள்?" என்று கேட்கிற வியாஜத்தினால் அந்தப் பொருளை ஆராய்ச்சி செய்ய ஆண்டாள் நமக்கு உத்போதனம் செய்கிறாளாயிற்று. இது அஜ்ஞாத ப்ரச்நமன்று, ஜ்ஞாதப்ரச்நமேயாகும். நன்னூலில் "அறிவறியாமை ஐயுறல் கொளல் கொடை, ஏவல்தரும் வினா ....." என்பதொரு சூத்திரம். அறியாத விஷயத்திற் கேள்வி கேட்பது போல அறிந்த விஷயத்திலும் கேள்வி கேட்பதுண்டு. அறிந்ததில் கேள்வி ஏதுக்கு? என்னில்; தாம் மட்டு மறிந்தால் போதாதே; பிறரையும் அறியச்செய்ய வேண்டியே கேட்கிறபடி.

திருமங்கையாழ்வார் சிறுபுலியூர்ச் சல சயனப்பெருமாளை நோக்கி "சேயோங்கு தண்திருமாலிருஞ் சோலைமலை யுறையும் மாயா!, எனக்குரையாயிது, மறைநான்கி னுளாயோ? தீயோம்பு கைமறையோர் சிறு புலியூர்ச்சலசயனத்தாயோ? உன தடியார் மனத்தாயோ அறியேனே" என்கிறார். உண்மையில் அறியாததா இவ் விஷயம். கூரத்தாழ்வான் தேவப்பெருமாளை நோக்கி "பக்தாநாம் யத் வபுஷி தஹரம் பண்டிதம் புண்டரீகம் யச்சாம்லாநம் வரத ஸததாத்யாஸநாத் ஆஸநாப்ஜம், ஆம்நாயாநாம் யதபி ச சிரோ யச் ச மூர்த்தா சடாரேः ஹஸ்த்யத்ரேர் வா கிம் அதிஸௌகதம் தேஷு பாதாப்ஜயோஸ் தே?" என்றொரு கேள்வி கேட்கிறார். இதுவும் அஜ்ஞாத ப்ரச்நமன்று. அறிந்ததிலும் கேள்வி கேட்பதில் ஒரு ரஸ விசேஷமுண்டு. ஆழ்வாராசாரியர்களின் திவ்ய ஸூக்திகளில் இத்தகைய கேள்விகள் எண்ணிறந்தவை யுள்ளன. ஆங்காங்கு நம்முடைய வியாக்கியானங்களிலே நிரூபிக்கப் பட்டுள்ள ரஸ விசேஷங்களை ரஸிகர்கள் குறிக்கொண்டே யிருக்கின்றார்கள். * எற்றுக் குறங்கும் பொருளென்ற விவ்விடத்தில் இந்த வுறக்கத்தின் மருமத்தை உய்த்து உணரவேணு மென்பதே ஆண்டாள் திருவுள்ளம்.

*அநாதிமாயயா ஸுப்தः* என்றவிடத்துச் சொல்லப்பட்ட உறக்கம் போலன்றிக்கே விலக்ஷணமான உறக்கமே விலக்ஷண வ்யக்திகளுக்குள்ளது. பகவத் கீதையில் (2–69.) * யா நிசா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ, யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிசா பச்யதோமுநேः* என்னுமிந்த ச்லோகமானது ஸம்ஸாரிகளின் ஜாகர நித்ரைகளையும், யோகிகளின் ஜாகர நித்ரைகளையும், நன்கு உணர்த்துவதாகும். ஸர்வப்ராணிகளுக்கும் எது இரவோ அவ்விரவில் ஜிதேந்த்ரியனானவன் விழித்துக் கொண்டிருக்கின்றானென்றது இந்த ச்லோகரத்னத்தின் பூர்வார்த்தத்தில். ஸர்வப்ராணிகளும் கண்விழித்துக் கொண்டிருக்கும்படியான பகலானது ஜிதேந்திரியனுக்கு இரவாகிறது என்றது உத்தரார்த்தத்தில். இந்த

வார்த்தை மருமமாகவல்லவா உள்ளது. நாம் கண்ணெடுத்துப் பார்க்க விரும்பாமல் வெறுத்திருக்கும் விஷயத்தை ஜிதேந்திரியர்கள் விரும்பிப் பார்க்கிறார்களென்பது வாஸ்தவந்தானே. பகவத்பாகவத விஷயங்களை நாம் விரும்பிப்பாராமல் அவற்றிலே வெறுப்புக் கொண்டிருக்கிறோமென்பதும், இவ்விஷயங்களை ஸாதுக்கள் விரும்பிப் பார்க்கிறார்களென்பதும் உண்மைதானே. இதுதான் பூர்வார்த்தத்தில் சொல்லப்பட்டதாயிற்று. நாம் விரும்பிப்பார்க்கிற லௌகிகவிநோதங்களைக் காணக் கண்கூசியிருப்பர்கள் ஸாதுக்களென்பது உத்தரார்த்தத்தின் தாற்பரியம். நம்முடைய பகல் ஸாதுக்களுக்கு இரவாகிறது; ஸாதுக்களின் பகல் நமக்கு இரவாகிறது என்று சொன்னவிது அநுபவத்திற் கிணங்கியதேயன்றோ. ஸ்வரூபாநுரூபங்களான விஷயங்களில் கண்ணோட்டம் செலுத்தாமல் ஸ்வரூபநாசகங்களான விஷயங்களிலேயே நாம் கண்ணோட்டம் செலுத்தியிருப்பது தகாது என்கிற சிக்ஷணத்தில் இந்த கீதா ச்லோகத்திற்கு முழுநோக்கு. இப்பாட்டிலுணர்த்தப்படுகிற உத்தமவ்யக்தி உறங்குவதாகச் சொல்லப்படுவதன் பொருள் இப்போது நன்கு விளங்கிற்றாயிற்று. ஸம்ஸாரிகளின் பகலை இரவாகக் கொண்டு கண்மூடியிருக்கும் விலக்ஷணவ்யக்தியல்லவோ நீ; நாங்களும் உன்னைப்போன்றவர்களேயாதலால் கண்திறக்கலாம் என்றதாயிற்று.(11)

## 12. அறிவுமாலை.

பன்னிரண்டாம் பாட்டினீற்றடியில் *அனைத்தில்லத்தாருமறிந்தென்றதை நோக்கியது இம்மாலைக் குறிப்பு. *அனைத்தில்லத்தாருமறிந்தென்ற விதற்குப் பலபடியாகப் பொருள் கூறுவர். "இனித்தானெழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்" என்று சொன்னவுடனே "அனைத்தில்லத்தாரு மறிந்தென்று கூறினவிதன் கருத்தை ஆழ்ந்து நோக்கவேணும். நங்காய்! உண்மையில் நீ உறங்குகின்றாயல்லை; பகவத்விஷயாநுபவத்திற்குப் புறம்பு அதிகாரிகளில்லாமையாலே நாம் ஏகாந்தமாக விருந்து அநுபவிக்கவேணுமத்தனை யென்று நினைத்து [குருகை காவலப்பனைப் போலே] ரஹஸ்யமாக அநுபவிக்கிறாய் போலும்; புறம்பே இதற்கு அதிகாரிகளில்லை யென்று நினைக்கவேண்டா; அனைத்தில்லத்தாரும் பகவத்விஷயாவகாஹனம் முற்றியிருக்கும்படியான இப்பாடியிலே இஃதறியாதாருமுளரோ? பகவதநுபவமறியாத இல்லமேயில்லை காண்—என்பதாகக் கொள்க. பொய்கையார் தமது திருவந்தாதியில் "அறியுமுலகெல்லாம் யானேயுமல்லேன்" என்கிறார். 'ஆழ்வார்களில் முதன்மை பெற்ற முதலாழ்வார்களிலும் முதல்வனான யான்மட்டு மறிவேனல்லேன்; உலகெல்லா மறிந்துளது' என்பதன்றோ இங்குச் சொல்லப்படுகிறது. அப்படி யறியப்பட்ட விஷயம் எதுவென்னில்; *வெறிகமழுங் காம்பேய் மென்தோளி கடை வெண்ணெயுண்டாயை, தாம்பேகொண்டு ஆர்த்த தழும்பு* என்பதனால் அஃது இன்னதென்று விளக்கப்பட்டது. வெண்ணெயுண்ட குற்றத்திற்காக யசோதைப் பிராட்டி உன்னைக் கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டிவைத்திருந்ததனால் உன்னுடம்பு தழும்பேறிக் கிடக்குஞ் செய்தியை நானொருவன் மட்டுமோ அறிவேன்? உலகமெல்லாமறியுமே யென்று கூறினர். அவனுடைய பரத்வத்தை யறிவதற்கு அதிகாரிகள் துர்லபராலும் ஸௌலப்யத்தை யறியாதாருளரோ? க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபநி புத்ராநயனம், வைதிகபுத்ராநயனம் முதலான பரத்வசரித்திரங்களையறிவார் மிகச்சிலரேயாயினும், வெண்ணெய் களவுகண்டான் கட்டுண்டான் அடியுண்டழுதேங்கினன் என்கிற எளிமைச் சரிதையை அறியாதார் ஒருவரேனு முளரோ? இத்தகைய ஸௌலப்யத்தை யநுபவிப்பதன்றோ சிறந்தவநுபவமாவது; இவ்வநுபவத்திற்கு அதிகாரிகள் ஊராக மலிந்திருக்கையாலே சடக்கென எழுந்துவந்து நீயுமித்திரளிலே சேர்ந்து அநுபவிக்கப்பாராய் என்பதாகக் கருத்தை விரிக்க.

அன்றியும், முன்னம் "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியானைப் பாடவும்" என்று ராமவ்ருத்தாந்தம் சொன்னதனால், 'க்ருஷ்ணகுணங்களை வெள்ளங் கோத்திருக்குமித் திருவாய்ப்பாடியிலே க்ருஷ்ண கதையை விட்டு ராமகதையைச் சொல்லுவது நீதியோ? *ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவந் கதாஃ" என்ன நின்ற அயோத்தியிலே க்ருஷ்ண நாமம் சொன்னால் ஸஹித்திருப்பர்களோ? நந்தன் மைந்தனை அசோதை யிளஞ்சிங்கத்தின் சீர்மல் குமிப்பாடியிலே ராமன் பேர்சொன்னால் ஸஹித்திருக்கத்தகுமோ? அநீதியான இப்பெயரை இங்குப் பேசுவாரார்?' என்று சிவிட்கென்றிருந்தாயாகில்; ராமக்ருஷ்ணர்களின் அபேதத்தை [ஒற்றுமையை] இங்கு அறியாதாரில்லை; அனைத்தில்லத்தாரு மறிந்துள்ளார்கள் காண்—என்றதாகவுமாம். நாம் சிற்றிலிழைக்க அதைச் சிதைத்தவன் கண்ணனாயிருக்க "சீதை வாயமுதமுண்டாய்! எங்கள் சிற்றில் நீ சிதையேல்" என்றிலோமோ? நம்முடைய வளை துகில்களைக் கைக்கொண்டு வேண்டவும் தாராதான் கண்ணனாயிருக்க "இரக்கமே லொன்று மிலாதாய்! இலங்கை யழித்த பிரானே!" என்றிலோமோ? ஆக, தென்னிலங்கைக் கோமானைச் செற்றவனும் நம்மனத்துக்கினிய கண்ணனும் வெவ்வேறு வ்யக்திகளன்றிக்கே ஒரு வ்யக்தியே யென்பதை அனைத்தில்லத்தாரு மறிந்திருக்கையாலே சீறுபாறென்னாதே கடுகவந்துசேர் என்கிறதாகவுமாம். ... ... ... (12)

## 13. கள்ளந்தவிர்மாலை

பதின்மூன்றும் பாட்டினீற்றடியில் *கள்ளந்தவிர்ந்து கலந்தென்றிருப்பதை நோக்கியது இப்பாசுரமாலைக் குறிப்பு. இப்பாட்டிலுணர்த்தப்படுகிற ஆய்மகள் கள்ளங்கொண்டிருப்பதாக வைத்து அதைத் தவிர்ந்து தங்களோடே கலக்க வேணுமென்று கூறப்படுகிறது. சாஸ்த்ரங்களில் "யோந்யதா ஸந்தமாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே, கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றொரு வசனம் காண்கிறோம். எம்பெருமானுக்கு அடிமைப்பட்ட தன்னை ஸ்வதந்திரனாகவோ அந்ய சேஷபூதனாகவோ நினைப்பது கள்ள மெனப்படுகிறது. பிள்ளைப் பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் கச்சிநகரில் விளங்கும் கள்வரென்னும் பெருமாளுக்குப் பாடினபாட்டு, "பண்டேயுன்தொண்டாம் பழவுயிரை என்ன தென்று கொண்டேனைக் கள்வனென்று கூறாதே—மண்டலத்தோர் புள்வாய் பிளந்த புயலே! உனைக் கச்சிக் கள்வாவென்றோதுவது என் கண்டு?" என்றிங்ஙனேயுள்ளது. இதனாலும் ஆத்மாபஹாரக்கள்ளமே பாபங்களில் தலையான கள்ளமென்று காட்டப்பட்டுளது. இத்தகைய கள்ளம் இங்கு நெஞ்சால் நினைக்கவும் அப்ரஸக்தம். பகவத் பாகவத சேஷத்வத்தின் எல்லையிலே நிற்கும் உத்தமவ்யக்தியன்றோ உணர்த்தப் படுகிறாள். அவளுக்கு இத்தகைய கள்வம் புக வழி ஏது? பின்னை எத்தகைய கள்ளம் தவிரவேண்டுமென்கிறது இங்கு? என்னில்; அநுபவ நிஷ்டர்களில் ஏகாந்தமாக அசலறியாதபடி அநுபவிக்க ஆசைப்படுவர் சிலர். "அணியரங்கன் திருமுற்றத்து அடியார் தங்களின்பமிகு பெருங்குழுவுகண்டு யானுமிசைந்துடனே யென்று கொலோ விருக்கும் நாளே" என்று குலசேகராழ்வார் பாரித்தபடியே அடியார்கள் குழாங்களுடன் கூடி *மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கைத் திருவாய்மொழிப்படியே அநுபவிக்க ஆசைப்படுவர் சிலர். இலங்கையில் பிராட்டியைக் கண்டு திரும்புகையில் மதுவனத்திற் புகுந்த வானரமுதலிகள்படியிலே அநுபவிக்க ஆசைப்பட்டிருக்குமவர்கள், உள்ளே தனியிருந்து ஏகாந்தாநுபவம் பண்ணுவதைக் கள்ளமாகக் கருதுமவர்களாதலால், நங்காய்! நீ கைவல்யாநுபவம் பண்ணுமாபோலே தனியிருந்து செய்யும் அநுபவமானது எங்களையெல்லாம் வஞ்சித்துச் செய்யுமதாகையாலே கள்ளமேயாகுமத்தனை. அதனைத் தவிர்ந்து எங்களோடே கலந்து அநுபவிக்கவாராய் என்றதாயிற்று.

கள்ளத்தை மற்றொருவிதமாகவுங் கொள்ளலாயிங்கு. [இப்பாட்டின் முதலடியையும் இரண்டாமடியையும் நோக்குக.] நாங்கள் புள்ளின்வாய் கீண்டவனான கண்ணபிரானுடையவும், பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தவனான இராமபிரானுடையவும் கீர்த்திமாலைகளை வாசியறப் பாடுமவர்களாயிராநின்றோம். இதற்குக் காரணமென்னவென்றால், யசோதைப்பிராட்டி கண்ணனை யழைக்கும்போது 'கண்ணா! இங்கு வா' என்றழையாமல் "வருக வருக வருக விங்கே வாமன நம்பீ வருக விங்கே. கரியகுழல் செய்யவாய் முகத்து என் காகுத்தநம்பீ வருகவிங்கே" என்று 'வாமன மூர்த்தீ! இங்குவா; இராமபிரானே! இங்குவா' என்றும் "என் சிற்றாயர் சிங்கமே சீதை மணாளா" என்று மழைப்பது வழக்கமாதலால் அதற்கு இணங்கவே நாங்கள் உபயரையும் அநுபவிக்கிறோம்; நீ இங்கு'ராமனையநுபவிப்பது தேவதாந்தரபஜனத்தோடொக்குமென்று நினைத்து ஸ்ரீக்ருஷ்ணகுணாநுசிந்தனத்தை மட்டும் செய்கிறாய் போலும்; இது யதாப்ரதிபத்தியன்றாகையாலே கள்ளமேயாகும். இக்கள்ளத்தைத் தவிர்ந்து நந்தன் மதலையையும் காகுத்தனையும் நவின்று பாடுமெங்கள் கோஷ்டியிலே கலந்து உபயாநுபவமும் பண்ணப்பாராய் என்கிறதாகவுமாம்.

கீழ்ப்பாட்டில் "தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக் கினியானை" என்றோம். 'என்றுமெனக் கினியானை என்மணிவண்ணனை" என்று அசோதை கூறினதற்கு முரணாக வேறொருவனை மனத்துக்கினியானாகக் கூறிய இவர்களோடே நமக்கென்ன சேர்த்தியென்று நினைத்துத் தனியநுபவம் பண்ணுகிறாயாகில் இந்த அயதாப்ரதிபத்தியையும் தவிர வேணுமென்கிறார்களென்றுணர்க. .... (13)

## 14. பாடல் மாலை

பதினான்காம் பாட்டினீற்றடியில் * பங்கயக்கண்ணானைப் பாட வென்றதை நோக்கியது இப்பாசுரமாலைக் குறிப்பு. இப்பாட்டில் பங்கயக் கண்ணானை மட்டு மன்றிக்கே சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையனையும் பாடுகின்றார்கள் (அல்லது) பாட விரும்புகின்றார்கள். தடக்கையில் சங்கொடு சக்கரமேந்து மழகும் பங்கயக் கண்ணழகும் அநுபோக்தாக்களுக்கு அரிய பெரிய விருந்தாகும். சிறிது அநுபவிப்போம். கண்ணபிரான் சக்ரவர்த்தி திருமகனாகத் தோன்றின முந்தின அவதாரத்தில் திருவாழி திருச்சங்குகளைத் திருக்கையில் கொள்ளவே யில்லை. ஸ்ரீராமசரிதாம்ருத ஸாகரத்தில் சங்கசக்ரப்ரஸ்தாவமே யில்லையன்றோ. ஆயினும், இராவணன் மாண்டொழிந்த பின்பு ப்ரேத பூமியிலே புலம்பவந்த மந்தோதரி பெருமாளைப் புகழ்ந்து பேசும் பேச்சுக்களில் "நமஸ: பரமோ தாதா சங்கசக்ரகதாதர:" என்று (பெருமாளைத்) திருவாழி திருச்சங்குடையவராகப் போற்றினள். இதற்கு முன்னே பம்பாஸரஸ்ஸின் கரையிலே ஸுக்ரீவப்ரேரணையால் பெருமாளைக் காணவந்த திருவடி "ஆயதாச்ச ஸுவ்ருத்தாச் ச பாஹவ: பரிகோபமா:, ஸர்வ பூஷண பூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா:." [கிஷ். 3-15.] என்று கேள்வி கேட்டிருக்கிறார். இங்கு "ஆயதௌ ச ஸுவ்ருத்தௌ ச பாஹூ தே பரிகோபமௌ, ஸர்வபூஷணபூஷார் ஹௌ கிமர்த்தம் ந விபூஷிதௌ." என்று த்விவசன மிட்டு ச்லோகம் கூடுவதாயிருக்க, பஹுவசன மிட்டிருக்கைக்கு அடி ஆராயவேணும். இளைய பெருமாளையும் கூட்டிப் பேசிவருகிற ப்ரகரணமாகையாலே அவருடைய இரு புஜங்களையும் சேர்த்து பஹு வசந ப்ரயோகம் பண்ணிற்றென்று நிர்வஹிப்பாருமுண்டு. வ்யாக்க்யாத்ரு ஸார்வபௌமரான ஸ்ரீகோவிந்தராஜர் இங்கு மூவகைப் பொருள் பணிக்கையில் 'திருவடி பக்தச்ரேஷ்டராகையாலே இவர்க்குப் பெருமாள் சதுர்ப்புஜராக ஸேவை ஸாதித்தார்' என்னும் பொருளை மத்யஸ்தமாக்கிப் பணித்தார். இப்பொருளே ஸம்ப்ரதாயத் தலைவர்கள் ஆதரிக்குமது. இது எப்படியானாலும் மந்தோதரி வாக்கு ஸுஸ்பஷ்டமாக அமைந்துள்ளது. அவள் * சங்கசக்ரகதாதர:* என்று பெருமிடறு செய்து

சொன்னதைக் கேட்ட பெருமாள் இவ்வவதாரத்தில் சங்க சக்கர கதைகளுடன் வந்திலோமே! என்று மனக்குறையுற்று இனி அடுத்த அவதாரத்திலே சங்கசக்ர கதைகளில்லாமே வருவதில்லை யென்று திடமாக ஸங்கல்பித்துக் கொண்டு, அடுத்த தான க்ருஷ்ணவதாரத்திலே "ஜாதோஸி தேவதேவேச! சங்கசக்ரகதாதர!" என்று தாய் தந்தையர் உகந்து சொல்லும்படி சங்கசக்ரகதாபாணியாகவே தோன்றினன். ஆனாலும் "உபஸம்ஹர விச்வாத்மந்! ரூபமேதச் சதுர்ப்புஜம், ஜாநாது மாவதாரம் தே கம்ஸோயம் திதி ஜந்மஜஃ" என்கிற வேண்டுகோளுக் கிணங்கி திவ்யாயுதங்களை மறைத்துக் கொண்டான். உகவாதார்க்குக் கூசியே மறைக்கச் சொன்னபடியாலே உகந்தார்க்கு ஸேவை ஸாதிப்பித்துக் கொண்டே யிருந்ததாகத் தெரியவருகின்றது.

பெரியாழ்வார் திருமொழியில் (2—1.) * மெச்சூது பதிகத்தில் 'அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான்' என வருமிடத்து வியாக்கியானத்திலுள்ள ஐதிஹ்யம் அற்புதமானது. அப்பூச்சி காட்டுகையாவது, கண்ணை இறுத்துவது, மயிரால் முகத்தை மறைத்துக் காட்டுவது முதலானவை செய்து சிறுவர்களுக்கு அச்சத்தை விளைவிக்கும் சேஷ்டித விசேஷம் என்று ஸாமான்யமாகக் கொள்ளுவர் மருமமறியாதார். நம்பெருமாள் ஸன்னிதியில் சிறிய திருவத்யய நோத்ஸவத்தில் அரையர் இப்பதிகம் ஸேவிக்கையில் [எம்பெருமானார் காலத்திலே] உய்ந்த பிள்ளை யென்பாரொரு அரையர் அபிநயிக்குமளவில் அப்பூச்சி காட்டுகின்றானென்பதை கண்ணன் கண்ணிமையை மடக்கிக் கொண்டு வருவதாக அபிநயித்துக் காட்ட, அப்போது கோஷ்டியில் உடையவர் பின்னே எழுந்தருளியிருந்த எம்பார் அத்தகைய அபிநயத்தில் வைரஸ்யத்தைக் காட்டி, தம் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக் காட்ட, இச் சுவடறிந்த அரையர் தாம் முன்பு அபிநயித்த ரீதியை விட்டு எம்பார் காட்டினபடியே எம்பெருமான் திருத்தோள்களில் சங்கு சக்கரங்களைத் தரித்துக்கொண்டு சிறுவர்களையும் சிறுமிகளையும் அஞ்சச் செய்வதாக அபிநயித்துக் காட்ட, உடையவர் மிகவு முகந்தருளினர். இதனால் தேறுவதாவது, [பாரதங் கை செய்த அத்தூதனப் பூச்சி காட்டுகின்றான்] தூதனுய்த் தன் ஸௌலப்யத்தை வெளியிட்டு 'நம்மிலே ஒருவன்' என்று இவ்வுலகத்தவர் கொள்ளும்படி யிருப்பவன் அவர்கள் வெருவும்படி சில காலங்களில் ஈச்வரத்வ சின்னங்களைக் காட்டுவதுமுண்டு என்பதாம். அப்படிக் காட்டக் கண்டவர்கள் இவ்வாய்ச்சிகளாகையாலே இவர்கள் சங்கொடு சக்கரமேந்து மழகைப் பாட விரும்புவது பாங்கே.

கண்ணபிரான் வடமதுரையிலிருந்து நந்தகோபர் திருமாளிகையிலே வந்து சேர்ந்தவுடனே யசோதைப் பிராட்டி அத்தெய்வக் குழவியின் பாதாதி கேசாந்தமான வடிவழகை ஆயர்மங்கையர்களை யழைத்துக் காட்டுகையில் "நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய கைத்தலங்கள் வந்து காணீரே' என்று காட்டியதையும் குறிக்கொள்க. கண்ணன் காளியமர்த்தனம் செய்து திரும்புகையில் யசோதை "அஞ்சுடராழியுன் கையகத்தேந்துமழகா! நீ பொய்கைபுக்கு, நஞ்சுமிழ் நாகத்தினோடு பிணங்கவும் நானுயிர் வாழ்ந்திருந்தேன்" என்று கையுந் திருவாழியுமான வழகையநுபவித்துப் பேசு மழகு என்னே!. "அஞ்சுடராழி யுன் கையகத்தேந்துமழகா!" என்பது பாசுரத்தில் ஒரு முறை யிருந்தாலும் இதனை யசோதை ஒரு முறையா சொல்லி யிருப்பள்? பன்முறை பேசியும் த்ருப்தியடையாதிருப்பளன்றோ. மேலே * போற்றி போற்றி யென்று மங்களாசாஸனம் செய்புமிவர்கள் "வென்று பகை கெடுக்கும் நின்கையில் வேல் போற்றி" என்று திருவாழி யாழ்வானுக்கன்றோ பல்லாண்டு பாடுவது. பகவத் கீதையில் விச்வரூபங் கண்ட அர்ஜுநன் அக்காட்சியில் அத்ருப்தியைக் காட்டி "கிரீடிநம் கதிநம் சக்ர ஹஸ்தம் இச்சாமி த்வாம் த்ரஷ்டு மஹம் ததைவ, தேநைவ ரூபேண சதுர்ப்புஜேந..........." என்று பழைய ரூபத்தையே காட்டியருளவேணுமென்று வேண்டுகிறான். இங்கு பாஷ்யத்தில் ஸ்வாமி

"பூர்வவத் கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்தம் த்வாம் த்ரஷ்டுமிச்சாமி; அத: தேநைவ பூர்வஸித்தேந சதுர்ப்புஜேந ரூபேண யுக்தோ பவ" என்றருளிச் செய்வதனால் அர்ஜுநன் சதுர்ப்புஜரூப தர்சனத்தில் பழகியிருக்கிறானென்பதும் தெரிய வருகிறது.

அன்றியும், கண்ணபிரானது திருக்கைத் தலங்களிலுள்ள சங்கசக்ரரேகைகளைப் பற்றவும் இது சொன்னதாகக் கொள்ளலாம். ஏந்தும் என்றதற்கு இது அவ்வளவு சேராதாயினும் கொள்ளக் குறையில்லை. யாதவாப்யுதயத்தில் நான்காவது ஸர்க்கத்தில் 30, 31, 32 சுலோகங்களிலுள்ள இன்சுவை மிக்க கதையை உபேக்ஷிக்க மனமில்லை. [* ஆரண்யகாநாம் ப்ரபவ: பலாநாம் இத்யாதி.] திருவாய்ப்பாடி வீதியில் ஒரு குறத்தி காட்டுப் பழங்களைக் கொணர்ந்து விற்கையில் அவற்றை வாங்கியுண்ண வேணுமென்று விருப்பங்கொண்ட கண்ணபிரான் நெல்லைக் கொடுத்து அந்தப் பழங்களை வாங்க வேணுமென விரும்பிக் கைநிறைய நெல்லைக்கொண்டு உள்ளிருந்து புறப்பட்டான்; இளங்கையாகையாலே நெல்லுகள் கையில் தங்காமல் கீழே விழுந்து கொண்டே வந்தன. பழக்காரியிடம் வரும்போது வெறுங்கையனாகவே காணப்பட்டான் கண்ணன். * ஸுஜாதரேகாமய சங்க சக்ரம்] தாம்ரோதரம் தஸ்ய கராரவிந்தம், விலோகயந்த்யா: பலவிக்ரயிண்யா: விக்ரேது மாத்மாநமபூத் விமர்ச:*] கண்ணன் வெறுங்கையை விரித்தவாறே அந்தக் கையில் சங்கும் சக்கரமும் ரேகையாக நன்கு காணலாயின. அவற்றைக்கண்ட அக்குறத்தியானவள் 'ஐயோ! இந்த பரம புருஷக் குழந்தைக்கு இந்தக் காட்டுப் பழங்களையா நாம் விற்பது? ஆத்மாவையே விற்கவேண்டாவோ' வென்று தோன்றிற்றாம். இப்படிப்பட்ட கதைகளைப் பாட விரும்பினபடியைச் சொல்லிற்றாகக் கொள்க.

[பங்கயக்கண்ணனைப்பாட.] "க: புண்டரீக நயந:? புருஷோத்தம: க:?" என்னும்படி புருஷோத்தமத்வ பிசுநங்களான செந்தாமரைக் கண்களினழகையும் பாட விருப்பம். *பங்கய நீணயனத்தஞ்சன மேனியனே! * தண்ணந் தாமரைக் கண்ணனே கண்ணா *. ... .... .... .... .... (14)

## 15. வேறோர் பாடல் மாலை.

பதினைந்தாம் பாட்டினீற்றடியில் * மாயனைப்பாட வென்றிருப்பதை நோக்கியது இம்மாலைக் குறிப்பு. வகபர்த்தி கத்வால்ஸம்ஸ்தான ஸதஸ்ஸில் வேதபரீக்ஷை கொடுக்கப்போனார் ஒரு ச்ரோத்ரியர். பதக்ரம ஜடா கனங்களிற் போலே ஸம்ஹிதையிலும் பரீக்ஷை நடக்கிறது. பரீக்ஷகர் "யத்வை" என்றார். பரீக்ஷ்யர் உடனே "வைஹோதாத்வர்யும்" என்று ஆரம்பித்தார். அப்போது பரீக்ஷகர் தெலுங்கில் "வை, காது" ('வை அன்று') என்ன, பரீக்ஷிதர் "வா அநீசாநோ பாரமாதத்தே" என்று சொல்லித் தலைக்கட்டினர். வேத மோதாதவர்களுக்கு இங்கு ரஸமொன்று மேற்படாது. விவரிக்கிறோம் கேண்மின். "யத் வை ஹோதா" என்று தொடங்கும் பஞ்சாதி மூன்றாங் காண்டத்திலுள்ளது; "யத் வா அநீசாநோ பாரம்" என்று தொடங்கும் பஞ்சாதி ஆறாம் காண்டத்திலுள்ளது. இரண்டிடத்திலும் இரண்டாவது பதம் (வை) என்பதுதான். ஆனால் முந்தின விடத்தில் ஹல்லெழுத்து பரமாயிருப்பதால் அந்த பதத்திற்கு (வை) என்றே ச்ரவண முள்ளது. பிந்தின விடத்தில் அச்செழுத்து பரமாயிருக்கையாலே வை என்பது (வா) என்றாய் விட்டது. பரீக்ஷகர் தாம் விரும்பும் பஞ்சாதியை வ்யக்தமாகச் சொல்லிப் பரீக்ஷியாமல் மருமமாகக் கேட்டிருக்கிறார். (யத்வை) என்ற வுடனே (யத்வை ஹோதா) என்கிற பஞ்சாதி தான் எவர்க்கும் அநாயாஸமாக ஸ்புரிக்கும். வேறொன்றிருக்கிற தென்பது நினைவுக்கே வராது. பரீக்ஷகர் ஜடராயிருந்தால் 'இதைப்போல் வேறோரிடம் இருக்கிறதா? பார்?' என்பர். பரீக்ஷ்யனும் அவனுக்குத் துணைவனாயிருந்தால் திசிதிசி விலோஸ

நயநனுயிருப்பன். இங்கு பரீக்ஷகரும் சதுரர்; பரீக்ஷிதரும் அதி சதுரர். (வை, காது) என்று சொல்லி வாய் மூடுவதற்குள்ளே சொல்ல வேண்டியதைச் சொல்லித் தீர்த்து விட்டார் பரீக்ஷிதர். அதாவது ஆறுங்காண்டத்துப் பஞ்சாதியைச் சொல்லிமுடித்தார்.

ப்ரக்ருதத்தில் திருப்பாவையில் அப்படிப்பட்ட பரீக்ஷையில்லை. "ஒவ்வொரு காலக்ஷேபஸ்வாமியும் அடைவே ஒவ்வொரு பாட்டின் ஈற்றடியை உயிராகப் பற்றிக் கொண்டு பேசுவது" என்றாலே போதும். மாலையாகவே குறிப்பிடவேண்டில் (14.) பாடல் மாலை. (15.) அதுவே. என்று குறித்துவிட்டால் குறிப்பறியமாட்டாரா? ப்ரச்ந மாலிகையில் எவ்விதமான சாதுர்யமும் சுவையுமில்லையே. வேதலக்ஷணங்களில் எழுத் தடையாளம் காட்டியிருப்பது போல "ணனைப்பாடல் மாலை" "யனைப்பாடல்மாலை" என்றிட்டாலாவது அது வொரு விலக்ஷண லக்ஷணத்தில் சேரும். கண்ணனைப் பாடல் மாலை, மாயனைப் பாடல் மாலை என்றிட்டாலு மழகியதே. திருமங்கையாழ்வார் சிறிய திருமடலில் "வெண்ணெய் திரண்டதனை வேறோர் கலத்திட்டு" என்றார். இங்கு வேறோரென்றதற்கு ரஸமான பொருளுண்டு; யசோதை தான் கடைந்த வெண் ணெயை வெண்ணெய்க் கலத்தில் இட்டு வைத்தால் கள்வக் கண்ணன் தெரிந்து கொள்வனென்று உப்பு, புளி, மூளகாய் வைக்கிற கலத்திலே அதை யிட்டு வைத் தாளாம். இப் பொருளை ரஸிகர்கள் கேட்கும்போது மிக ரஸிப்பார்கள். "வேறோர் பாடல் மாலை" என்று அபூர்வ ரஸிகர்கள் இட்டவிம்மகுடத்தில் ஒரு சுவையுமில்லையே.

வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க வல்லானை மாயனைப் பாட விரும்பினார்கள் இங்கு ஆய்ச்சிகள். இந்தப் பாடல் ஸ்ரீக்ருஷ்ண விஷயத்திற்போல ஆசார்ய விஷயத்திலும் நன்கு பொருந்தும். கண்ணன் கம்ஸனால் அக்ரூரரை யிட்டு மதுரைக்கு தன்னுடைய வில்விழ வென்கிற வியாஜத்தினால் வரவழைக்கப்பட்ட போது அங்கு அரண்மனை வாசலில் மதமூட்டி நிறுத்தப்பட்டிருந்த குவலயா பீட மென்னும் யானையைப் பாகனோடும் கூட அவலீலையாகக் கொன்றிட்ட கதை வல்லானை கொன்ற கதை; இதனைப் பாடுகையாவது, * ஆவரிவை செய்தறிவார் அஞ் சன மாமலை போலே, மேவு சினத்தடல் வேழம் வீழ முனிந்து, அழகாய காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழ வீதி வருவான் வாழ்க வாழ்க வாழ்கவே * என்றும், * கவள யானை கொம்பொசித்த கண்ணன் வாழி, * காமருசீர்க்குவளை மேகமன்ன மேனி கொண்ட கோனென்னானை வாழி யென்றும் பாடுகை. [மாற்றாரை மாற்றழிக்க வல்லான்] கண்ணபிரான் பகைவரைக் கண்டால் 'இன்றுபோய் நாளைவா' என்ற இராமபிரானைப்போல் ஒரு பேச்சுப் பேசான்; மாரீசனையும் சூர்ப்பணகையையும் முடித்திடாதே விட்டு வைத்து அனர்த்தத்தை விளைத்துக் கொண்டதுபோல் விளைத் துக்கொள்ளான்; வெட்டொன்று துண்டிரண்டாக்கி முடித்திடுவன். [மாயன்.] இத்தனையும் சிரமப்பட்டுச் செய்கையன்றிக்கே "எல்லையில் ஞானத்தன் ஞானமஃதே கொண்டு எல்லாக் கருமங்களுஞ் செய் எல்லையில் மாயனைக் கண்ணனை" என்கிற திருவாய்மொழியின்படியே ஸங்கல்ப மாத்திரத்தினால் செய்து தலைக்கட்டுமவ னென்கை. இத்தகைய கீர்த்திமைகளைப் பாட விரும்பியபடி. இனி ஆசார்ய விஷ் யத்திற் கேண்மின். * வல்லானை கொன்றானை யென்ற விடத்து ஆனை யென்னுஞ் சொல் பால்பகா அஃறிணைப் பெயராதலால் ஒரு யானையை யன்றிக்கே பல யானை களையுஞ் சொல்லும்; கண்ணன் முடித்திட்டது ஒரு யானையை; ஆசாரியர்களோ வென்னில் "வாரிசுருக்கி மதக்களிறைந்தினையும் சேரிதிரியாமல்" என்ற பொய்கை யாரருளிச் செயலின்படியே பஞ்சேந்திரியங்களாகிற ஐந்து யானைகளைத் தகர்த்தவர் கள். "வஹதி மஹிளாமாத்யோ வேதா:" இத்யாதி யதிராஜஸப்ததி ஸூக்தியின் படியே ஜிதேந்திரியர்களென்கை. மாற்றாரை மாற்றழிக்கும் வல்லமையும் இவர்கள் பக்கலிலே புஷ்கலம். "நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கி யாதொன்றுமில்லை, கலியுங்கெடும்" "கொன்றுயிருண்ணும் விசாதி பகைபசி தீயனவெல்லாம் நின்றிவ்

வுலகில் கடிவான் நேமிப்பிரான் தமர்போந்தார்" "இடங்கொள் சமயத்தை யெல்லா மெடுத்துக் களைவன போலே தடங்கடல் பள்ளிப் பெருமான் தன்னுடைப் பூகங்களே யாய்" என்று * பொலிக பொலிகவிலே ஆழ்வார் பகர்ந்த பெருமை இவர்களுடைய தேயன்றோ. [மாயனை] எம்பெருமான் தானவதரித்து ஆனைத்தொழில்கள் புரிந்தும் திருத்தப் போகாத வுலகத்தைத் திருத்திப் பணிகொண்ட ஆச்சரியத்தை யநுஸந்திப்பது. "மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லாவுலகோர்களெல்லாம் அண்ணலிராமானுசன் வந்து தோன்றியவப்பொழுதே நண்ணருஞானம் தலைக்கொண்டு நாரணற்காயினரே." என்கிற இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரத்தை இங்கே பொருத்தமாக அநுஸந்திப்பது. இரும்பைப் பொன்னாக்குமாபோலே நித்யஸம்ஸாரியான சேதநனை * வெள்ளுயிராக்கி, நித்யஸூரிபரிஷத்திலே வைக்குமாச்சரியம் ஆசாரியர்கட்கே அஸாதாரணமானது. ஆக இங்ஙனம் கண்ணபெருமானையும் ஆசிரியர்களையும் ஏகயோக்த்யாபாடப் பாரித்தபடி. .... .... .... .... (15)

---

## ஸம்ஸ்க்ருத ப்ரியர்களுக்கு விஜ்ஞாபனம்.

14, 15 ஆகிய இரண்டு பாட்டுக்களிலும் கண்ணபிரானைப் பாடுகை ப்ரஸ்துதமாயிருக்கையாலே கண்ணபிரான் விஷயமாக வடமொழியில் இரண்டு கீதமாலிகைகள் ஏற்கெனவே நாம் இயற்றி வெளியிட்டிருந்தவற்றை இங்கே பிரசுரிக்கிறோம். பக்தர்கள் கண்டபாடம் செய்து பாடத்தகும்.

### 1. கோவிந்த கீதாம்ருதம்

१. अतिमधुर निनदभर मुरलिधर कृष्ण
२. मनुजतनु परिकलन कुतुकधर कृष्ण
३. मुदिरसम ललितनिज तनुसुषम कृष्ण
४. जलजसम नयनयुग सुभगतर कृष्ण
५. कटितटग कनकमय शुभवसन कृष्ण
६. कृतसुकृत जनहृदय शुभनिलय कृष्ण
७. कटुहृदय दितिजकुल हतिचटुल कृष्ण
८. प्रणतजन मुखकमल विकसनद कृष्ण
९. अतिविपुल धरणिभर परिहरण कृष्ण
१०. सकलमुनि जनविनुत शुभचरित कृष्ण

.... .... ....

११. देवकीजठरधन्यताकरण भावनाविवश माधव
१२. दुग्धवारिनिधि सद्मवासरुचि हीनमानसक माधव
१३. धन्यकृत्य वसुदेवकौतुक भरप्रपूर्तिकर माधव
१४. पुण्यलभ्य मधुरापुरीवरनिषेवणादरण माधव
१५. शङ्खचक्रमुख दिव्यहेतितति दर्शितस्वगुण माधव
१६. दिव्यभव्य वपुरीक्षणोन्मुदित तातमातृनुत माधव
१७. हेतितल्लज निगूहनार्थिपितृ शासनप्रवण माधव
१८. क्षीणभाग्य वसुदेवमस्तधृत नीतगोपकुल माधव
१९. भव्यभाग्यनिधि भोगिराजफण वाटिकानिलय माधव
२०. हन्तहन्त बत हाबतेति वसुदेवखेदपद माधव
२१. अस्तु भद्रततिरस्तु भद्रतति रित्यमर्त्यनुत माधव
२२. निस्समाभ्यधिक हर्षसागर निमग्ननन्दसुत माधव
१३. नन्दनन्दन विनोदवल्लव विहारमानुष रमाधव
२४. गोपिकारमण कुम्भजारमण रुक्मिणीरमण माधव

[ सावशेषमेतत् । ]

---

## 2. கோபால பக்தாம்ருதம்

मधुरवेणुप्रणादन महितवेषप्रकाशन जलदसच्छायविग्रह जडजनस्वान्तदुर्ग्रह ।
सुभगपीताम्बरोज्ज्वल सुकृतिचित्तस्थलाचल जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ १ ॥
कलितदेवनयनुग्रह गलितदुग्धाब्धिसद्गृह सुवसुदेवात्मसंभव सुमथुरापुर्युपागत ।
करलसच्छङ्खचक्रक सुररिपुच्छेदिविक्रम जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ २ ॥
स्वपितृकारागृहोद्भव सवितृजैत्राननप्रभ धरणिभारक्षयोदय सुरजनप्रोल्लसद्धय ।
प्रथितरोहिण्युडूदय कथितवाक्पालनव्रत जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ ३ ॥
अशरणत्राणदीक्षित पृथुरणत्रातपाण्डव हरविधीन्द्राद्यभिष्टुत चकितमातापितृस्तुत ।
व्रजविहारादिकोत्सुक निजमनोभीष्टवत्सक जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ ४ ॥
घनतमोरात्रिनिर्गत फणिफणस्तोमरक्षित पटुयशोदास्तनन्धय कटुमनःकंसवञ्चक ।
सुभगनन्दालयप्रिय सुकृतिचेतोहरक्रिय जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ ५ ॥
अतुलसौन्दर्यमन्दिर विपुललावण्यसुन्दर दलितजीमूतडम्भक जलधिडिम्भाख्यडिम्भक ।
सकलचित्तापहारक विनतहृत्तापहारक जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ ६ ॥
सुभगगोपालबालक सकलभक्तौघपालक सतनुसाहस्रमन्मथ सुतनुचित्तैकमन्मथ ।
सुरगणप्रत्तभूषण सुरुचिरस्वादुभाषण जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ ७ ॥
कुटिलहृत्पूतनावधपटुरिति प्राप्तकीर्तिक शकटदैतेयभञ्जनचरणपङ्केरुहद्वय ।
कटुतृणावर्तमारण चटुलभूयःपराक्रम जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ ८ ॥
कलितमृद्भक्षणानन नियतसद्रक्षणादर वदनसंदर्शिताखिल बहुलमायाविचेष्टित ।
अमितलीलाविनोदक सकलतापापनोदक जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ ९ ॥
यमलवृक्षावमर्दन धनदपुत्राघमोचन फलदगोपीमनोहर वनफलादानसादर ।
मसृणबर्हावतंसक सुतनुगर्हार्हचेष्टित जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ १० ॥
मुषितहैयङ्गवीनक मुषितगोपीदुकूलक धृतबृहद्दामबन्धन कृतमहच्चित्तबन्धन ।
अमितसौलभ्यसागर बहुलसौशील्यमन्दिर जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ ११ ॥
प्रतिगृहख्याततस्कर नतभयध्वान्तभास्कर मधुरचारित्रमोहन महितगोवृन्ददोहन ।
मधुपवृन्दाभकुन्तल सकलसंतापकृन्तन जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ १२ ॥
विपुलवृन्दावनस्थलविहरणानन्दतुन्दिल ललितहृद्यौवतप्रिय सुतनुवासोहृतिप्रिय ।
अपयशस्तोमकीर्तिक शुभयशस्तोममूर्तिक जयजय श्रीयदूद्वह जयजय श्रीश केशव ॥ १३ ॥

[ सावशेषमेतदपि । ]

———

# 16. நேயமாலை

* நாயகனாய் பாசுரத்தினீற்றடியில் "நேசநிலைக்கதவம் நீக்கென்றிருப்பதை நோக்கியது இம்மாலைக் குறிப்பு. திருப்பாவை முக்கியமாக ஸ்வாபதேசார்த்தத்தையே உயிராகக் கொண்டதாதலால் ஒவ்வொரு பாட்டுக்கும் விரிவான ஸ்வாபதேசார்த்தங்களை நாம் நம்முடைய விரிவுரைகளிலும், விசேஷித்து ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்திலும் விவரித்துள்ளோம். இப்பாட்டில் நேசநிலைக்கதவம் நீக்கென்றதன் இன்சுவைப்பொருள் நெஞ்சிற்படவேணுமானால் பாசுரத்தின் பூர்த்தியான ஸ்வாபதேசார்த்தம் முன்னம் குறிக்கொள்ளப்படவேணும். ஆகவே அதைச் சுருக்கமாக விளக்கிக் காட்டிவிட்டு, பிறகு நேசநிலைக்கதவம் நீக்க வருவோம்.

[நாயகனாய் நின்ற] ஆசார்ய கோஷ்டியில் நடுநாயகமாக நிற்பவர் எம்பெருமானார் என்று காட்டுகிறபடி. "அமுநா தபநாதிசாயிபூம்நா யதிராஜேந நிபத்த நாயகஸ்ரீ:" என்ற யதிராஜ ஸப்ததிஸூக்தியும் காண்க. [நந்தகோபன்.] எம்பெருமானைப் புத்திரனாகப் பெற்ற விஷயத்தில் எம்பெருமானார்க்கு நந்தகோபனோடு ஸாதர்மியம். யதிராஜ ஸம்பத்குமாரனென வழங்கப்படுகிற செல்வப் பிள்ளையை க்ருஷ்ணகிசோர ஸ்தானீயனாகக் கொள்க. [உடைய] ஸ்வாமிக்கு உடையவரென்று வழங்கும் திருநாமத்தை ஸூசிப்பித்தபடி. [கோயில்காப்பான்] கோயிலென்கிற சொல் திருவரங்கம் பெரியகோயிலை மட்டும் சொல்லுவதாகவுங் கொள்ளலாம்; மற்றும் பலகோவில்களையும் சொல்லுவதாகவுங் கொள்ளலாம். * தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே * என்றும், *ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய* என்றும் சொல்லுகிறபடியே திருவரங்கச் செல்வத்தைக் காத்தருளினவரென்கை. *மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்று முவந்திடுநாள்* என்கிறபடியே ஸகல திவ்ய தேசங்களையும் உத்தரிப்பித்தவர் ஸ்வாமியே யாதலால் கோயில்களைக் காத்தருளினவரென்பதும் பொருத்தமே. [கொடித்தோன்றுந் தோரணவாசல் காப்பானே!] *கொடியணி நெடுமதிள் கோபுரம் குறுகினர்* என்றும் *நெடுவரைத் தோரணம் நிரைத்தெங்குந் தொழுதனருலகே* என்றும் சொல்லுகிறபடியே கொடியும் தோரணமுமான வாசல் பரமபதவாசல்; அதுதன்னையும் ஸ்வாமி யெம்பெருமானார் தம்முடைய ஆளுகையிலே வைத்துக்கொண்டிருப்பவரென்கை. எம்பெருமானார் திருவருளைப் பெறாதவர்களுக்கு அந்த வாசலிற் புகுவது அரிது என்கிற ப்ரஸித்தியைக் காட்டினபடி. [மணிக்கதவம் தாள் திறவாய்] மணியாவது ரத்னம். நவரத்னமென்று சொல்லப்படுவதனால் ரத்னங்கள் ஒன்பது என்று ப்ரஸித்தம். நவரத்னம் போன்ற ஒன்பது திவ்ய க்ரந்தங்களை ஸ்வாமி பணித்தருளினார். வேதார்த்த ஸங்க்ரஹம், ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம், வேதாந்த தீபம், வேதாந்த ஸாரம், சரணாகதிகத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம், நித்யம்—என்று ஒன்பது திவ்யக்ரந்தங்களையே இங்கு மணிக்கதவமென்கிறது. கதவு எப்படி பதார்த்தங்களுக்கு ரக்ஷகமோ அப்படியே இந்த திவ்யக்ரந்தங்களும் மறைப்பொருள்களுக்குச் சேமக்காப்பாக அமைந்தவை யாதலால் கதவென்றது மிகப் பொருத்தம். (கதவு, கதவம்—இவை பர்யாயமே.) இந்த க்ரந்தங்களிலுள்ள பொருள்களை நாங்கள் அநுபவிக்கும்படி செய்தருளவேணுமென்பது தாள்திறவா யென்றதன் கருத்து.
"ஆயர்சிறுமியரோமுக்கு மணிக்கதவம் தாள் திறவாய்" என்று அந்வயிப்பது. அறிவிலிகளான எங்களுக்குப் புரியும்படி யருளிச் செய்யவேணுமென்கை.

[மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்.] எம்பெருமான் தன்னுடைய சாஸ்த்ரங்களிலே முன்னமே தேவரீரைப்பற்றிச் சோதிவாய் திறந்து பணித்துள்ளானென்று கருத்து. *கலௌ ராமாநுஜஸ் ஸ்ம்ருத:* கலௌ கச்சித் பவிஷ்யதி* உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந:* இத்யாதி ப்ரமாணங்களை இங்கே அநுஸந்திப்பது. [தூயோமாய் வந்தோம்] * ஆசார்யாதிஹ தேவதாம் ஸமதிகாம் அந்யாம் ந மந்யாமஹே * என்கிறபடியே ஆசார்யர்க்கு மேற்பட்ட தெய்வமில்லை யென்கிற ஸாவசுத்தியோடே வந்திருக்கிறோம் என்கை. தூயோமாகவந்தோம் என்றும் கொள்ளலாம். ஸகலார்த்தங்களையும் நாங்கள் தெரிந்துகொண்டு பவித்திரர்களாம்படி வந்தோமென்றவாறு. [துயிலெழ பாடுவான் வந்தோம்] *அநாதிமாயயா ஸுப்த:* என்னும்படி அநாதிமாயையினாலே உறங்கிக்கிடக்கிற நாங்கள் அவ்வுறக்கம்விட்டு உணர்ச்சிபெறுவதற்காகவும், *ஏதத் ஸாம காயந்நாஸ்தே* என்கிற படியே ஸாமகானம் பண்ணிக்கொண்டிருக்கவும் வந்தோம். [வாயால் முன்னமுன்னம் மாற்றாதேயம்மா] *நாஸம்வத்ஸரவாஸிநே ப்ரப்ரூயாத்* இத்யாதிகளைச் சொல்லி எம்மை விலக்கித் தள்ளாமல் அங்கீகரிக்கவேணுமென்கை.

இனி நேயமாலைக்கு வருவோம். [நீ நேச நிலைக்கதவம் நீக்கு.] கதவுகள் இரட்டையாயிருப்பதுபோலத் திருமந்த்ரமும த்வயமும் சரமச்லோகமும் இரட்டையாயிருக்கையாலே அவற்றைக் கதவாக விவக்ஷித்து அவற்றின் பொருள்களையுமுபதேசித்தருளவேணுமென்கிறது. திருமந்த்ரமானது—ப்ரணவம் மந்த்ரசேஷமென்று இரட்டை; த்வயம்—பூர்வ வாக்யம் உத்தர வாக்யமென்று இரட்டை. சரமச்லோகம்—பூர்வார்த்தம் உத்தரார்த்தம் என்று இரட்டை. இவையே நேசநிலைக்கதவமாகச் சொல்லப்பட்டன. இவற்றைத் திறப்பதாவது—இவற்றின் பொருள்களை விவரித்தலாம்.

கதவம், நிலைக்கதவம், நேசக்கதவம் என்று மூன்றாகப் பிரித்து முறையே திருமந்திரத்தையும் சரமச்லோகத்தையும், த்வயத்தையும் பொருளாகக் கொள்க. [கதவம்] நம்முடைய பொருளைக் காப்பாற்றித் தருவது கதவு; *எண்பெருக்கந்நலத்தொண்பொருளான ஆத்மஸ்வரூபத்தைக் காப்பாற்றிக் கொடுப்பதான திருமந்திரம் கதவு. [நிலைக்கதவம்.] நம்மை நிலைநின்று ரக்ஷிப்பதாக ப்ரதிஜ்ஞை செய்கிற சரமச்லோகம் நிலைக்கதவம். [நேசக்கதவம்] எம்பெருமானைக் காட்டிலும் நம் பக்கலில் நேசமுள்ளவளான பிராட்டியின் மந்திரமான த்வயம் நேசக்கதவம். "இவள் தாயாய் இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்னியாய் இனிய விஷயமா யிருக்கையாலே கண்ணழிவற்ற புருஷகாரம். திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்லவேண்டாவிறே" என்கிற முமுக்ஷுப்படி சூர்ணைகள் இங்கே அநுஸந்திக்கத்தக்கன. ஆக, ரஹஸ்யத்ரயத்தின் பொருளை விளக்கியருளவேணுமென்றும், விசேஷித்து த்வயார்த்தத்தைத் திறந்தருளவேணுமென்றும் பிரார்த்தித்தபடியாயிற்று. ... .... ... (16)

## 17 உறங்காமாலை

பதினேழாம்பாட்டினீற்றடியில் * உம்பியும் நீயுமுறங்கே லென்றிருப்பதை நோக்கியதாமிம்மாலைக்குறிப்பு. * உம்பியும் நீயு முறங்கேலென்பதன் உயிரான பொருள் உள்ளத்திற் பதியவேண்டுமானால் இங்கும் பாசுரத்தின் பூர்த்தியான உயிர்ப்பொருள் உணரப்பட வேண்டும். அதனை முன்னமுணர்த்துவோம்.

இப்பாட்டில், நந்தகோபர் யசோதை கண்ணபிரான் பலராமன் என்கிற வியாஜத்தினால் முறையே ஆசார்யன், திருமந்த்ரம், திருமந்த்ரார்த்தம், திருமந்த்ரார்த்த ஸாரம் ஆகிய இந்நான்கும் உரிய சொற்களால் தெரிவிக்கப்படுகின்றன. (எங்ஙனே யென்னில்;) நந்தகோபாலன் அம்பரமும் தண்ணீரும் சோறும் அறஞ்செய்வதாகச் சொல்லியுள்ளது. இம்மூன்றையும் ஆசார்யனே அறஞ்செய்யக் காண்கிறோம். அம்பரமென்பது ஆகாசம்; பரமாகாச சப்த வாச்யமான *நலமந்தமில்லதோர் நாடெனும் ஸ்ரீ வைகுண்டத்தை ப்ராபிக்கச்செய்வதே அம்பரமறம் செய்கை. தண்ணீரென்பது விரஜையாறு. விரஜா நதீஸ்நானத்தைச் செய்விப்பவனென்கை. சோறு என்பது— "அன்னம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத்" என்ற உபநிஷத்தில் அன்னமாக ஓதப்பட்ட ப்ரஹ்மமேயாம். *அஹமந்நாதோஹ மந்நாதோஹமந்நாத:" என்று ஸாமகானம் செய்துகொண்டு ப்ரஹ்மாநுபவம் செய்யும்படி பண்ணுவிப்பவர் ஆசாரியர். நந்தகோபாலனென்றதும் ஆசார்யரிடத்திற் பொருந்தும். *எடுத்தபேராளன் நந்தகோபன்* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி. நந்தகோபர் நிதியெடுத்தாற்போலே அகஸ்மாத்தாகக் கண்ணனைப்பெற்றுப் பரிபூர்ண பகவதநுபவம் செய்தவர். ஆசார்யரும் அப்படியே யன்றோ.

இனி. கொம்பனார்க்கெல்லா மென்று தொடங்கி இரண்டடிகளால் பகவானைப் பிள்ளையாகப்பெற்ற மாதாக்களுள் மிகச் சிறந்தவளே! என்று சொல்லி யசோதைப் பிராட்டி எழுப்பப்படுகிறாள். *உஜ்ஜநிதா ஸாவித்ரீ விதா—மந்த்ரோ மாதா குரு: பிதா* என்ற பிரமாணத்தின்படி மாதாவாகச் சொல்லுகிறது மந்த்ரத்தையே. மாதாவானவள் ப்ரஜையைத் தன் வயிற்றினுள்ளே அடக்கிக் கொண்டிருப்பதுபோல மந்த்ரமும் பகவானைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்குமே. பகவானுடைய மாதாக்களுள் யசோதை ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்! நானே மற்றாருமில்லை' என்னும்படி சிறப்புற்றது போலத் திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரம் மற்றுமுள்ள மந்த்ரங்களிற் காட்டில் சிறப்புற்றதன்றோ. முமுக்ஷுப்படியில் "பகவந் மந்த்ரங்கள்தான் அநேகங்கள்; அவைதான் வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டு வர்க்கம். அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்; இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்" என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம். இதற்குமேல் "அம்பரமூடறுத் தோங்கி யுலகளந்த" இத்தியாதியால் திருமந்த்ரார்த்தம் அநுஸந்திக்கப்பட்டதாகிறது. எம்பெருமான் ஸர்வவ்யாபகனென்பதே நாராயண மந்த்ரார்த்தமாதலால் அந்த ஸர்வவ்யாபகத்வமே இங்கு அநுஸந்திக்கப்பட்டதாயிற்று. திருமங்கையாழ்வாரும் திருநெடுந்தாண்டகத்தில் (4) "மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல்" என்று திருமந்த்ர ப்ரஸ்தாவம் செய்தவுடனே (5.) *ஒண்மிதியிற் புனலுருவி* என்கிற அடுத்த பாசுரத்தினால் திருமந்த்ரார்த்தமான த்ரிவிக்ரமாபதானத்தையேயன்றோ அநுஸந்தித்தது. இதற்குமேல் *செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா* இத்யாதியினால் பாகவதோத்தமனான நம்பிமூத்தபிரானை [பலராமனை] யுணர்த்தியது "நின் திருவெட்டெழுத்துங் கற்று நானுற்றது முன்னடியார்க்கடிமை" என்று திருமங்கையாழ்வார் திருமந்த்ரத்தின் ஸாரார்த்தமாக எடுத்துக் காட்டியருளினது பாகவத சேஷத்வமாகையாலே அதனை ஸூசிப்பித்தபடி. இங்கு "உம்பியும் நீயுமுறங்கேல்" என்று இருவரையும் ஒன்று சேர்த்துச் சொன்னது பகவச் சேஷத்வமும் பாகவத சேஷத்வமும் ஒன்றை விட்டொன்று பிரிந்திரா தென்கிற தத்துவத்திற்கு ஸ்மாரகமாகும்.

சிலர், பகவச் சேஷத்வம் வேறு, பாகவத சேஷத்வம் வேறு என்று மயங்கியிருப்பர்கள்; அது தவறு. பகவச் சேஷத்வ காஷ்டையே பாகவத சேஷத்வமாகும். காஷ்டாவஹமான

ஜௌஷஸைவ ஸாமவந்தமேஷஸயிதயங்க, இங்கு "யஸ்வைவவஷவஹவய நத ஸமாம மேஷஸ காஷாஜஹஜ நஸாரோ:—யஸ் ஸப்த பர்வ வ்யவதாந துங்காம் மோஷத்வகாஷ்டாமபஜந்மு ராரே:" என்கிறபாதுகாஸஹஸ்ரதிவ்ய ஸூக்தி அநுஸந்தேயம். ஆக இவ்விரண்டு சேஷத்வ மும் ஒன்றைவிட்டொன்று பிரியாதென்பதை யுணர்த்தவே *உம்பியும் நீயுமுறங்கேலென்று இருவரையும் சேர்த்துப் பிணைத்துப் பேசிற்று. ... ... ... (17)

# 18 மகிழ்ச்சி மாலை

பதினெட்டாம் பாட்டினீற்றடியில் *வந்து திறவாய் மகிழ்ந்தென்றிருப்பதை நோக்கி யது இம்மாலைக்குறிப்பு. *பந்தார் விரலியுன்மைத்துனன் பேர்பாடச் செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப மகிழ்ந்துவந்து திறவாய்* என்னுமளவும் ஒரு வாக்கியமாகையாலே இவ்வளவுக்கும் உயிரான பொருளை யறிந்தாலல்லது 'மகிழ்ச்சிமாலை' அறியப்போகாதாதலால் அதனை யறிவிக்கிறோம் முன்னம்.

[பந்தார் விரலி!] *ஹரே விஹரஸி க்ரீட கந்துகைரிவ ஜந்துபி:* என்கிறபடியே லீலோ பகரணமா யிருக்கின்ற பிராணிகளையே பந்தாகச் சொல்லுகிறது. இவர்களைக் கைப்படுத்தி அவர்களோடே போது போக்குவர் ஆசாரியர். [செந்தாமரைக் கையால்] யதிராஜ ஸப்ததி யில் "உந்நித்ரபத்மஸுபகாம் உபதேச முத்ராம்* என்று கூறியிருப்பதை நினைப்பது. உபதேச முத்ரை கொண்ட திருக்கையினுலென்றபடி. [சீரார்வளையொலிப்ப வந்துதிறவாய்] த்வனிப் பொருள்கள் மல்கும்படி உபதேசித்தருள வேணுமென்கை. [மகிழ்ந்து] எம்முடைய நிர்ப் பந்தத்திற்காக வன்றிக்கே தம்பேறாக உகந்து உபதேசிக்க வேணுமென்கை. இப்பாட்டுக்கு அந்தரங்கமான வொரு ஸ்வாபதேசார்த்தம் கேளீர். * தக்கார் பலர் தேவிமார் சாலவுடை யீர்* என்றும் *பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு* என்றும் சொல்லுகிறபடியே கண்ண பிரானுக்கு இவ்வவதாரத்தில் பல பல தேவிமார்களிருந்தாலும் திருவாய்ப்பாடியில் நப் பின்னைப் பிராட்டியே மிகச்சிறந்த தலைத்தேவியாவள். இதுபோல எம்பெருமானுக்கு அபி மத விஷய பூதர்களான ஆசாரியர்கள் பல் பலரிருந்தாலும் எம்பெருமானொருவரே "*தஸ் மின் ராமாநுஜார்யே குருரிதி ஸ பதம் பாதி நாந்யத்ர*" என்னும்படி அவன் திருவுள் ளமுகந்த பேராசிரியராவர். ஒருவர்க்கு மடங்காத எழு காளைகளை வலியடக்கிக் கண்ணன், நப்பின்னைப் பிராட்டியை மணம் புரிந்தான். பகவான் எம்பெருமானாரைப் பரிக்ரஹித்து, ஒருவர்க்கு மடங்காத காளைபோன்ற எழுவிரோதிகளைக் களைந்தொழித்தான். அந்த எழு விரோதிகள் யாவரென்னில், "அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே" என்பதிற் சொல்லப்பட்ட அறுவரும் "செறுகலியைச் சிறிது மறத் தீர்த்து விட்டான் வாழியே" என்பதிற் சொல்லப்பட்ட கலி புருஷனுமாக எழுவர். இந்த நப்பின்னையைக் "கந்தங்கமழுங் குழலீ!" என்று கேசபாசத்தி னழகையிட்டுக் கூறினது எம்பெருமானார் மதாந்தர ஸந்யாஸிகளைப் போலே சிகையைத் துறவாமல் "கமநீயசிகாநிவேசம்" என்றும் "சிகயா சேகரிணம் பதிம் யதீநாம்" என்றும் "காரிசுதன் கழல் சூடிய முடியும் கனநற் சிகைமுடியும்" என்றும் சொல்லுகிறபடியே சிகாபந்த ஸௌந்தர்யத்துடனே யெழுந்தருளி யிருந்தபடியை நினைப்பூட்டும். பந்தார்விரலி! என்றதும் ஸ்வாமிக்கு மிகப்பொருத் தம். பந்து என்பது ஆசார்ய ஹ்ருதயத்தில் "பந்து கழற்பாவை..........பொங்கைம் புலனில் போக்யாதி ஸமூஹம்" என்றருளிச் செய்தபடி லீலாவிபூதி முழுவதையும் சொல்

னுகிறது. இது நித்ய விபூதிக்குமுபலக்ஷணம். ஸ்வாமிக்கு உடையவர் என்றிறே திருநாமம்; உபய விபூதியையும் தம் கையிலே யுடையவர் என்றபடி. அதுவே பந்தார்விரலி யென்பதனால் ஸூசிதமாகிறது.

இப்பாட்டினீற்றடியில் மகிழ்ந்து என்கிற வினையெச்சம் உயிராகக் கொள்ளப்பட்டது. உபதேசிக்குமாசிரியர்க்கு மகிழ்ச்சியுண்டாவது அரிது; ஏனென்றால், இவன் ஸம்வத்ஸரவாஸம் பண்ணிற்றிலனே; *நாஸம்வத்ஸரவாஸிநே ப்ரூயாத்* என்கிற விதியைக் கடந்து உபதேசிக்கவேண்டியிருக்கிறதே; "ஶிஷ்யஃ ப்ராஜ்ஞஃ வரீக்ஷாட பரிக்ஷணீயஃ" என்றிருக்க, ஒரு பரீக்ஷையுமின்றிக்கே இவனுக்கு உபதேசிக்கவேண்டியதாகிறதே; இவன் ப்ரேமத்தோடே பேணியநுஸந்திக்குமவனோ அல்லனோ? இத்யாதி ஶங்கைகளினால் நெஞ்சு தளும்பியிருக்குமாசிரியர்க்கு மகிழ்ச்சி எங்ஙனே யுண்டாகும்? ஆனாலும் "மனமுடையீரென்கிற ச்ரத்தையே அமைந்த மர்மஸ்பர்ஶிக்கு நானும் நமருமென்னும்படி ஸர்வருமதிகாரிகள்" என்கிற ஆசார்யஹ்ருதய ஸூக்தியின்படி எங்களைப் பூர்ணாதிகாரிகளாகக் கொண்டு மகிழ்ச்சியில் ஈஷத்தும் குறையின்றியே பரமதருப்தியோடு நெஞ்சுதிறந்து வாய்திறந்து கதவு திறந்து உபதேசிக்கவேணுமென்கை. .... ... ... .... (18)

## 19. தகவு மாலை.

பத்தொன்பதாம்பாட்டினீற்றடியில் *தத்துவமன்று தகவென்றிருப்பதை நோக்கியது இம்மாலைக்குறிப்பு. தத்துவமன்று தகவென்று யாரை நோக்கிச் சொல்லப்படுகிறது? என்ன காரணத்தினால் சொல்லப்படுகிறது? என்று தெரிந்து கொண்டாலன்றி இங்கு ஈற்றடியின் பொருள் த்ருப்திகரமாக நெஞ்சிற்புகாது. ஆகவே *மைத்தடங்கண்ணினாயென்று தொடங்கி விவரித்தாகவேண்டும். நுட்பமாக விவரிக்கிறோம்.

[மைத் தடங் கண்ணினாய்!] ஆசார்ய ஸார்வபௌமருடைய விசேஷாபிமான பாத்ரபூதனான விலக்ஷண சிஷ்யனுடைய தன்மை சொல்லுகிறது இதனால். மையென்பது அஞ்சனம்; அதாவது ஸித்தாஞ்ஜனம். *மநஸி விலஸதாக்ஷ்ணா பக்தி ஸித்தாஞ்ஜநேந* என்று பட்டரும், *ஸித்தாஞ்ஜநேந பவதைவ விபூஷிதாக்ஷா: பச்யந்தி*என்று தேசிகனும் பணித்தபடியே பக்தி ஸித்தாஞ்ஜனமணியப் பெற்று அதனால் ஞானவிகாஸம் பெற்றவரே! என்கை. [நீயுன் மணாளனை எத்தனைபோதும் துயிலெழ வொட்டாய்] மணாளனென்கிறது ஆசார்யனை. அவர் கண் திறந்து எங்களைக் கடாக்ஷிக்க நினைத்தாலும் எங்கள் மேல் கடாக்ஷ வீக்ஷணம் ப்ரஸரிக்க வொண்ணாதபடி உன்மேல் ஒரு மடைப்படுத்தியிருக்கின்றாயே என்றவாறு. இப்படியிருக்கையன்றோ ஸச்சிஷ்யர்களுக்குப் பெருமை. "எத்தனை போதும் துயிலெழ வொட்டாய்" என்றதனால் அந்தப் பெருமைதான் காட்டப்பட்டதாகிறது. [எத்தனையேனும் பிரிவாற்றகில்லாய்] *ஆசாரியன் செய்த உபகாரமானவது, தூய்தாக நெஞ்சு தன்னில் தோன்றுமேல், தேசாந்தரத்திலிருக்க மனந்தான் பொருந்த மாட்டாது'* என்கிறபடியே ஆசார்யரை க்ஷண காலம் விட்டுப் பிரிகையும் அஸஹ்யமாயிருக்குமாயிற்று ஸச்சிஷ்யனுக்கு. [தத்துவ மன்று தகவு = தத்துவம் தகவன்று] இதில் பரம குஹ்யமான வேதாந்த விழுப்பொருளொன்று நுட்பமாகக் காணத்தக்கது. அத்வைதிகள் "தத்வமஸி" என்கிற வாக்யத்தையே பற்றிக்கொண்டு அத்வைத வாதத்தை ப்ரபலப் படுத்துகிறார்கள். அவர்கள் கூறும் பொருளை நம் ஆசார்யர்கள் அயுக்தமென்று கண்டிக்கிறார்கள்; இங்கு 'தத்த்வம் தகவன்று' என்றது *தத்த்வமஸிக்குப்

பிறர்கூறும் பொருள் தகுதியற்றது—என்று ஸூசிப்பித்தபடி. தத்த்வமஸிக்கு நாம் சொல்லும் பொருள் தகுதியற்றது என்று ஸூசிப்பித்ததாகவும் ஆகலாமன்றே? என்று சிலர் கேட்கக் கூடும். அவர்களை முன்னம் தெளிவிக்கிறோம். *தத் த்வம் தகவன்று" என்று மூலத்திலுள்ளது; தத் என்பதற்கு வாச்யன பரப்ரஹ்மமும், த்வம் என்பதற்கு வாச்யனான ஜீவாத்மாவும் ஒன்றேயென்பது அன்று என்பதாக ஸ்வாரஸ்யப்பொருள் கிடைப்பதால் அந்யதாஶங்கைக்கு அவகாஶமில்லை. நம்முடைய ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரஶதகத்தில் "தத்த்வமஸ்யாதி வாக்யம் வாக்யார்த்தா ... விஜயிஹிவெ... ... " என்றவிடத்து நம்முடைய சிந்தாமணி வியாக்கியானத்தில் *தத்த்வமஸிக்குப் பிறர் கூறும் பொருள் ஸர்வாத்மநா அஸங்கதமென்பது மிகவிரிவாக உரைக்கப்பட்டிருப்பதால் அங்குக் கண்டு கொள்வது.

## 20. நீராட்டு மாலை.

இருபதாம் பாட்டினீற்றடியில் *இப்போதே யெம்மை நீராட்டென்றிருப்பதை நோக்கியது இம்மாலைக் குறிப்பு. நப்பின்னை நங்கையை நோக்கி "உன்மணாளனை எம்மை இப்போதே நீராட்டு" எனப்படுகிற திங்கு. உன்மணாளனோடே எம்மைச் சேர்த்து நீராட்டு என்பது தாற்பரியமாகத் தேறுகின்றது. நீராடுவதென்பது தாபம் தீருகைக்காகச் செய்யும் செயலாதலால் உன்மணாளனுடைய தாபமும் எங்களுடைய தாபமும் தீர்ந்ததாகும்படி திருவே! நீ செய்ய வேணுமென்கிற பிரார்த்தனை தேறிற்றுகிறது. ஸம்ஸாரிகளான நமக்குத் தாபமுண்டென்பது வாஸ்தவம்; "ஸம்தப்தம் விவிதைர் து:க்கைர் துர்வசை ரேவமாதிபி: தேவராஜ தயாஸிந்தோ! தேவதேவ! ஜகத்பதே, த்வதீக்ஷண ஸுதாஸிந்து வீசி விக்ஷேபஶீகரை:, காருண்ய மாருதாநீதைச் சீதலைரபிஷிஞ்ச மாம்" என்று திருக்கச்சி நம்பிகளும், "தாபத்ரயீமய ... ஹஸ்தீஶ! ... வ்ருஷ்டிபிராபஜேதா:" என்று கூரத்தாழ்வானும் பணித்தபடியே நாம் தாப தப்தர்களாயிருக்கிறோம்; எம்பெருமானுக்குத் தாபப்ரஸக்தி யேது? என்று கேட்கக் கூடும். கேண்மின். பிள்ளைப் பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் திருநாங்கூர்த் திருவெள்ளக்குளத் திருப்பதிக்குப் பாடல் பாடுமவர்; "நானடிமை செய்ய விடாய் நானுனே னெம்பெருமான், தானடிமை கொள்ள விடாய் தானுனன்—ஆனதற்பின், வெள்ளக் குளத்தே விடாயிருவரும் தணிந்தோம், உள்ளக்குளத் தேனையொத்து" என்றுபாடினர். எம்பெருமானுக்கு அடிமை செய்யவேணு மென்கிற விடாய் நமக்கிருப்பதுபோல, நம்மை அடிமை கொள்ளவேணு மென்னும் விடாய் அவனுக்கு முள்ளது. சேதனனும் ஈச்வரனும் கலந்தால் இருவருடைய விடாயும் தணியுமாயிற்று. உண்மையில் நம்முடைய விடாயிற்காட்டிலும் அவனுடைய விடாயே மிகப் பெரிது என்பது ஆழ்வார்களின் ஈரச் சொற்களினால் அறுதியிடப் படுகின்றது. பகவத் கீதையில் (8-14) *அநந்யசேதாஸ் ஸததம்...... தஸ்யாஹம் ஸுலப: பார்த்த* என்றவிடத்திற்கு பாஷ்யமருளாநின்ற ஸ்வாமி "தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே" என்று பகவானுடைய உக்தியாக வருளிச் செய்துள்ளார். அவன் பேராவல் கொண்டு நம்மோடு ஸம்ச்லேஷிக்க வந்தாலும் நாம் வெறுத்துத் தள்ள, அவன் நம்முடைய பிரிவை ஆற்ற வொண்ணாமே பதறுகிறானென்றால் அவனது விடாய் எத்தகைத்தாயிருக்க வேண்டும்! ஆளவந்தாரும் "மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதி து:ஸ்ஸஹ:" என்றருளிச் செய்கிறாரிறே. அவனுடைய விடாயை உள்ள படியறிந்தவர்கள் பேசுகிற பேச்சுக்களன்றோ இவை, "க்ஷுத் த்ருட் பீடித ... போலே

கண்டு கொண்டுண்டுபருகி " என்ற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தி யொன்று போதுமே. ஆக, நப்பின்னை நங்காய் திருவே! எம்மையும் உன்மணாளனையும் இப்போதே நீராட்டு என்றது இருதலையினுடையவும் தாபத்தைத் தணியச் செய்திடாய் என்றதாயிற்று. ... .... (20)

## 21. புகழ் மாலை.

இருபத்தோராம் பாட்டினீற்றடியில் * போற்றியாம் வந்தோம் புகழ்ந்தென்றிருப்பதை நோக்கியது இம்மாலைக் குறிப்பு. இது கண்ணபிரானை நோக்கி ஆய்ச்சியர்கள் சொல்லுவது. * மாற்றாருனக்கு வலிதொலைந்து உன் வாசற்கண் ஆற்றாது வந்து உன்னடிபணியுமா போலே போற்றியாம் வந்தோம் புகழ்ந்து * என்னுமளவும் ஒரு வாக்கிய மாகையாலே இதற்குச் சேரப் பொருள் காணவேணும். பகவத்பரமான அர்த்தமும் ஆசார்ய பரமான அர்த்தமும் இதற்குக் கேளீர். ஸர்வபூத ஸுஹ்ருத்தாகவும், ஸர்வபூதேஷு ஸமனாகவும், *தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யதைவதமாகவும் பூஸித்தனான பகவானுடைய திருவுள்ளத்தினாலே மாற்றாரெனப் படுபவர் யாருமிலர். * பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணா ஹி பாண்டவா:* என்ற ஸ்ரீபகவத் ஸூக்தியின்படியே தாம் தாமாக ஸ்ரீபகவத விரோதம் பண்ணித்திரியுமவர்களே மாற்றாரெனப்படுபவர். அன்னவர்கள் எதிரம்பு கோத்து ஜீவிக்க மாட்டாமல் தத்தம் வலிமாண்டு தங்கள் அநந்யகதித்வம் தோற்ற உன் திருவாசலிலே வந்து படுகாடு கிடந்து போற்றிப் புகழுமா போலே நாங்களும் வந்து சேர்ந்து உனது பாலேபோல் சீரில் பழுத்தொழிந்து புகழுரைகளைப் பேசாநின்றோமென்கை. இனி ஆசார்ய பரமான அர்த்தம் கேளீர்.

[ மாற்றாருனக்கு வலி தொலைந்து இத்யாதி. ] மாற்றார்—மாறுபாடுகொண்டவர்கள்; பகைவர்களென்றபடி. ப்ரமாணங்களையும் ப்ரமேயங்களையும் ப்ரமாதாக்களையும் தூஷித்துக் கொண்டு வேறுபட்டிருந்த மதாந்தரஸ்தர்கள் இங்கு மாற்றார் எனப்படுகிறார்கள். அவர்கள் வந்து வாதஞ்செய்து வலிமாண்டு அடிபணிந்தார்களென்பது எம்பெருமானார் பட்டர் நம்பிள்ளைபோல்வாருடைய சரிதைகளிலே விசதம். யாதவ ப்ரகாசர் யஜ்ஞமூர்த்தி முதலானோர் எம்பெருமானார் திருவடிகளிலே வலிதொலைந்து அடிபணிந்தவர்கள். * தஞ்சீரை ஞானியர்கள் தாம் புகழு ம் வேதாந்திகள் நஞ்சீயராகி பட்டர் திருவடிகளிலே வந்து பணிந்ததும், தன்னு புகழ்க் கந்தாடைத் தோழப்பர், நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் முதலானோர் நம்பிள்ளை திருவடிகளிலே வந்து பணிந்ததும் ப்ரஸித்தம். அவரவர்கள் குணங்களுக்குத் தோற்றுப் போற்றிப் புகழ்ந்துகொண்டு வந்து புகுந்ததுபோல அடியோங்களும் வந்து புகுந்தோம், எம்மையும் ஆட்கொண்டருளவேணும்—என்று வேண்டிக் கொள்ளுகிறபடி. அத்வேஷிகளாகவும் அநுகூலர்களாகவுமிருந்தவர்கள் வந்து பணிவதிற்காட்டிலும் த்வேஷிகளாயிருந்தவர்கள் மாச்சரியம் நீங்கி வந்து பணிவது விசேஷமாதலால் அஃது இங்கெடுத்துப் பேசப்பட்டது. ஆசார்ய விஷயத்தில் சிஷ்யர்கள் முக்கியமாகச் செய்யவேண்டியது "ஸ்ரீஸாஸ்வாகாமயெ உபீஸாது" என்கிறபடியே ஆசார்யனுடைய திருக்குணங்களைப் புகழ்வதேயாம். "ஏற்றி மனத்தெழில் ஞான விளக்கை யிருளனைத்தும் மாற்றினவர்க்கொரு கைம்மாறு மாயனும் காணகில்லான், போற்றியுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்குபுகழ் சாற்றிவளர்ப்பதும் சற்றல்லவோ முன்னம் பெற்றதற்கே." .... ... ... ... (21)

# 22 சாபநிவாரண மாலை

*அங்கண்மாஞாலப் பாசுரத்தில்* அங்கணிரண்டுங் கொண்டெங்கள்மேல் நோக்குதியேல் எங்கள்மேல்சாப மிழிந்தென்றிருப்பதை நோக்கியது இம்மாலைக்குறிப்பு. ஆனால் சாபநிவாரணமென்றிருக்கத்தகாது. சாப நிவ்ருத்திமாலை யென்றிருக்கவேணும், நிவாரண மென்பதற்கு போக்குவதென்று பொருள். சாபத்தை ஒருவர் போக்குவதாகப் பாசுரத்தில் சொல்லப்பட்டிருக்கவில்லை. சாபம் தன்னடையே தொலையுமென்றே சொல்லப்பட்டுள்ளது. அதற்குச் சேர நிவ்ருத்திபதம் இருக்கவேணுமேயல்லது நிவாரணபதம் இருக்கத்தகாது. விழுந்தானென்பதற்கும் தள்ளுண்டானென்பதற்கும் எவ்வளவு வாசியுண்டோ அவ்வளவு வாசியுண்டு நிவ்ருத்திக்கும் நிவாரணத்திற்கும். ஆகவே சாபநிவ்ருத்தி மாலை யென்று மகுடத்தைத் திருத்திக்கொள்வது. எம்பெருமானுடைய கடாக்ஷம் சாபநிவாரணம் செய்வதாகக் கொண்டால் என்ன குறை? என்று மன்றாடவேண்டா. தப்பென்று நாம் சொல்லிவிட்டால் தப்புதானது. *த்ராதாரம் நபஸ்க்தா யாயீ ராகவஸ்ய* என்றதை நினைப்பது. சாபமிழியு மாலையென்று எளிதாக இட்டிருக்கலாமே. இது நிற்க. ஆய்ச்சிகள் தங்கள்மேல் ஏதோ சாபமிருப்பதாக இப்பாட்டில் சொல்லுகிறார்களே, இவர்களுக்கு எவ்விதமான சாபம், யார் கொடுத்த சாபம்? எப்போது கிடைத்தசாபம்? என்று கேட்கவேண்டா; அவசியம் அனுபவிக்கவே தீரவேண்டியதான பாபமே சாபமென்பது. எம்பெருமானைவிட்டுப் பிரிந்திருப்பதானது பிரபல பாபத்தின் பலனாதலால் இதுவே சாபமெனப்படுகிறது. இது அவன்றன்னுடைய திருக்கண்ணோக்கம் பட்டவாறே தொலையுமென்க. இங்கு "ச்ரமணீ விதுர ரிஷி பத்னிகளைப் பூதமாக்கின புண்டரீகாக்ஷன்னெடுநோக்கு சாபமிழிந்தென்னப் பண்ணுமிறே" என்கிற ஆசார்ய ஹ்ருதய சூர்ணை வியாக்கியானத்துடன் அநுஸந்திக்கத்தக்கது. எம்பெருமானுடைய ஒவ்வோரவயவமும் ஒவ்வொருத்தருடைய சாபம் தீர்த்தது. திருவடித்தூள் அஹல்யையின் சாபம் தீர்த்தது. திருமுழந்தாள் குபேர புத்திரர்களான நளகூபர மணிக்ரீவர்களின் சாபம் தீர்த்தது [யமளார்ஜுந பங்க கதையை நினைப்பது.] திருத்துடைகள் மதுகைடபர்களின் சாபம் தீர்த்தன. [*பிஷ்ட துஷ்ட மதுகைடப கீடௌ* இத்யாதி ஸுந்தரபாஹு ஸ்தவஸூக்தியை ஸ்மரிப்பது,] ருத்ரசாபம் மார்வில் ஸ்வேதத்தாலே தீர்ந்தது. துர்வாஸச்சாபம் மார்பிலிருப்பாளாலே தீர்ந்தது. இப்போது திருக்கண்களாலே ஒரு சாபம் தீர்கிறது. நித்ய ஸம்ச்லேஷம் கிடைப்பதே இவர்களுக்கு சாபம் தீர்வதாம்.

எம்பெருமானுடைய திருமேனியில் மூன்று திவ்யாவயவங்கள் பக்தர்களுக்கு முக்கியமானவை. அவற்றுள் முதல் அவயவம் திருக்கண்; *ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:* என்றபடியே ஜாயமாந காலத்திலேயே கடாக்ஷித்து ஸாத்விகத்வத்தை யுண்டாக்க வல்லதன்றோவிது. அப்படி கடாக்ஷிக்கப்பெற்றவர்களுக்குத் திருவடியே தஞ்சமாகிறபடியால் அது இரண்டாவதான அவயவம். அப்படி திருவடிகளிலே விழுந்தவர்கள் *அஞ்சேலென்று கைகவியாய்* என்று அபயப்ரதானத்தையே விரும்பிக் கொண்டிருப்பவர்களாதலால் அபயமுத்ராஞ்சிதமான ஹஸ்தம் மூன்றாவதான அவயவம். இவையெல்லாவற்றினுள்ளும் முக்கியமான அவயவம் திருக்கண்களே யாகும். அவற்றால் கடாக்ஷிக்கப்பெற்றால் சாபமென்று பேர் பெற்றவை யெல்லாம் தொலைந்துபோம். அவச்யம் அநுபோக்தவ்யமான பாபமென்று எதுவும் சேஷியாது. இங்கு ஸ்வாபதேசார்த்த முறையில் ஆசார்யருடைய கடாக்ஷமே அபேக்ஷிக்கப்படுறது.

ஆசார்யர் முதலிலேயே பரிபூர்ணகடாக்ஷம் செய்தருளினால் அதை போல சிஷ்யர்கள் தாங்க கில்லார்கள். *புள்ளும்பிள்ளைக்கிரைதேடு மென்கிற புள்ளம் பூதங்குடிப் பாசுரத்தின் வியாக்கியானத்திலே ஆலவாயுடையானென்னும் தமிழனுக்கு பட்டர் உரைத்தருளின அர்த்த விசேஷத்தின்படி சிஷ்யர்கள் தாங்கள் க்ரஹிக்கக்கூடியவளவில் அர்த்தங்களைச் சிறுகச் சிறுக உபதேசிப்பதுதான் செங்கண்சிறுச்சிறிதே விழிக்கை. இனி அங்கணிரண்டுங்கொண்டு விழிக்கையாவது—[இது விசேஷித்துக் குறிக்கொள்ள வேண்டிய சீரிய பொருள்] ஸ்பாஷி தநீவியிலும் ஸங்கல்பஸூர்யோதயத்திலுமுள்ளதொரு ச்லோகரத்னம் கேண்மின்; *ஏக ஏவ குரோர் த்ருஷ்ட்யா த்வாப்யாம் வாபி லபேத யத், ந தத் த்ரிபிர் அஷ்டாபிஸ் ஸஹஸ்ரேணாபி கஸ்யசித்* என்பது. ஆசாரியனுடைய ஒரு திருக்கண்ணினாலோ இருதிருக்கண்களாலோ ஒருவன் அடையக்கூடிய நன்மையை மற்றையோருடைய மூன்று கண்களினாலும் எட்டுக்கண்களினாலும் ஆயிரங்கண்களினாலும் அடைய முடியாது என்கை. ஆசாரியனுடைய ஒரு திருக்கண்ணாவது * சுபேந மநஸா த்யாதம்* என்னும்படியான அந்தரங்க கடாக்ஷம். எம்பெருமானாரை ஆளவந்தார் *ஆமுதல்வனிவன்* என்று உட்கண்ணாலே கடாக்ஷித்தது இங்கு நினைக்கத்தக்கது. இனி ஆசாரியன் இரு திருக்கண்களாலே கடாக்ஷிக்கையாவது—உட்கண்ணாலும் வெளிக்கண்ணாலும் கடாக்ஷிக்கையாம். *அக்ஷ்ணா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந* என்று சபரி சொன்னபடிக்கும், *யம் யம் பச்யதி சக்ஷுர்ப்யாம் யம் யம் ஸ்ப்ருசதி பாணிநா* என்றபடிக்கும் வெளிக்கண்பார்வைதானே பவித்ரமாக்கவல்லது; உட்கண் கடாக்ஷமும் உடன்சேர்ந்தால் கேட்கவேணுமோ? [மேலெடுத்த சுலோகத்தில், ஸஹஸ்ரேணாபி என்றதனால் இந்திரன் கண் விவக்ஷிதமன்று; புருஷஸூக்தோபக்ரமத்தில் ஸஹஸ்ராக்ஷ: என்றும், திருவாய்மொழியில் "தாமரைக்கண்களாயிரத்தாய்" என்றும் சொல்லப்பட்ட பரமபுருஷனுடைய திருக்கண்ணே விவக்ஷிதம்.] ஆக த்ரிமூர்த்திகளின் கடாக்ஷத்திலும் மேம்பட்டதான ஆசாரியகடாக்ஷம் லபிக்கப்பெற்றால் சாபம் தொலையத் தட்டென்? ஹேயமான அவித்யாதிகளையே சாபமென்கிறது. "போயிற்று வல்லுயிர்ச்சாபம்" என்றவிடத்து வியாக்கியானம் ஸேவிப்பது. .... .... .... (22)

## 23 ஆராய்ச்சிமாலை

*மாரிமலை முழஞ்சிற் பாசுரத்தினீற்றடியில்* யாம்வந்தகாரியம் ஆராய்ந்தருளென்றதை நோக்கியது இம்மாலைக்குறிப்பு. தாம்வந்த காரியம் இன்னதென்பதைச் சொல்லாதே 'காரியமாராய்ந்தருள்' என்னக்கூடாது. கீழ்ப்பாட்டிலே எம்மைக் கடாக்ஷித்தருளவேணுமென்று பிரார்த்தித்த ஆய்ச்சிகளை நோக்கிக் கண்ணபிரான் 'ஆயர் சிறுமிகளே! என்னிடம் பலர்வந்து கடாக்ஷிக்கவேணும், கடாக்ஷிக்கவேணும் என்பதுண்டு; கண்ணைத் திறந்து பார்ப்பது தானே கடாக்ஷம்; பார்த்தாயிற்று, போங்கள்' என்றால் உடனே, ஒரு காரியமாக வேணுமென்று ப்ரஸ்தாவிப்பர்கள்; நீங்களும் அப்படி ஒரு காரியத்தை யுத்தேசித்து வந்தவர்கள்தானே; அது இன்ன காரியமென்பதைச் சொல்லி விடுங்கள்' என்று பணித்தான். அது கேட்ட ஆய்ச்சிகள் 'பிரானே! திருப்பள்ளியறையில் சயனித்தபடியே என்னகாரியமென்று கேட்டருளாதே; உன்கோயில் நின்றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய சீரிய சிங்காசனத்

திருந்து அதன்பிறகு யாம் வந்தகாரியம் இன்னதென்பதை ஆராய்ந்தருள்' என்றார்கள். ஆகவே இங்கு ஆராய்ந்தருள் என்பதற்கு ஆலோசித்தருள் என்பது பொருளன்று; வினவியருள் என்பது பொருள், இவர்கள் வந்த காரியத்தை இப்பாட்டிலும் சொல்லவில்லை, மேற்பாட்டிலும் சொல்லவில்லை என்று பலர் நினைப்பர்கள். இரண்டுபாட்டிலும் சொல்லியேயிருக்கிறார்களென்பதை ஆராய்ந்து அறியவேணும். ஆராய்ச்சியில் வல்லவர்களே இதை அறியவல்லவர்கள் என்று காட்டவே ஆராய்ந்தருள் எனப்பட்டது. கீழே எட்டாம் பாட்டிலும் ஆராய்ந்தருளென்றுள்ளது. இங்கும் அங்ஙனமேயுள்ளது. ஆனால் பொருளில் வாசியுண்டு. அங்கு அருள்வன் என்பது அருளென்று குறைந்துகிடக்கிறது. தேவாதிதேவனை நாம் சென்று சேவித்தால் (அவன்) ஆராய்ந்து ஆவாவென்று அருள்வன் என்றதங்கு. இங்கு அருளவேணுமென்று வேண்டுகோள். அருள்—ஏவலொருமை வினைமுற்று என்க. நுனிப்புல் மேய்வார் கடக்கநின்று, "ஸாரம் து ஸாரஸ்வதம் ஜாநீதே நிதராம்" என்னும்படியான ஞானப்பெருமை வாய்ந்தவர்கள் ஆராய்ந்து பார்த்தால் இவர்கள் வந்த காரியம் இப்பாட்டிலேயே சொல்லப்பட்டுள்ளதென்றறியலாம். வந்த காரியம் என்றது வருகைக்கு உறுப்பான காரியம் என்றபடி. யதாய-ராய-ம் வயஶா ம தாஃஷஃ, தகாாய-ம் விசாரயெத்யஃ. இவர்களுக்கு உத்தேச்யமான காரியம் இப்பாட்டில் தெரிவிக்கிறபடி சேண்மின். கண்ணபிரான் பள்ளிகொள்ளும்போது "ஏரார்கோலந் திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே!" என்றும் "அம்மாமலர்க்கண்வளர்கின்றானே என்னான் செய்கேனே!" என்றும் ஈடுபட்டு "அரவணையாய் ஆயரேறே! துயிலெழாயே" என்று திருப்பள்ளியுணர்த்தவேணுமென்பது ஒரு காரியம். இக்காரியம் நிறைவேறியாயிற்று. அடுத்த காரியங்கள்—உள்ளிருந்து புறப்பட்டருளுமழகு காணவேணும், சீரியசிங்காசனத்து வீற்றிருக்குமழகு காணவேணும், பல்லாண்டு பாடவேணும் என்பன. இவை ஒவ்வொன்றும் ஸமப்ரதானங்களான காரியங்கள். புறப்பட்டருளுமழகு காண்கையும், வீற்றிருக்கு மழகு காண்கையுமாகிற காரியங்களானவை விண்ணப்பம் செய்தவுடனே இப்பாட்டிலேயே ஸித்தித்து விட்டன. பல்லாண்டுபாடுகையாகிற காரியம் அடுத்தபாட்டில் நிறைவேறுகிறது.

பெருமாள் புறப்பட்டருளுமழகுண்டே, அது வாசாமகோசரம். இது விசேஷித்து நம்பெருமாள் ஸன்னிதியிலே அநுபவிக்கத்தக்கது. ஸ்ரீராமாயணத்தில் பெருமாளுடைய புறப்பாட்டினழகை "வவ-தாஜிவ நிஷ்க்ரம்ய ஸிம்ஹோ கிரிகுஹாஶய:" என்று வான்மீகி வருணித்தார். அதனையே ஆண்டாள் இப்பாட்டில் நான்கு அடிகளாலே விவரித்துரைத்தாள். அதற்குமேல் * உன்கோயில் நின்று இங்ஙனே போந்தருளி * என்பதனால் நடையழகு காணுமாசை தெரிவிக்கப்பட்டது. அசோகவனத்திலே அலற்றுநின்ற பிராட்டி "யந்த்ரா: வஶ்யந்தி யெ நாயம் ஸிம்ஹவிக்ராந்தகாமிநம்" என்று பெருமாளுடைய நடையழகை நினைத்துப் புலம்பினாள். *அக்ரதஸ்தெ கமிஷ்யாமி ம்ருத்நந்தீ குஶகண்டகாந் * என்று சொன்னவள் முன்னே போகாமல் "அக்ரத: ப்ரயயௌ ராம: ஸீதா மத்யெ ஸுமத்யமா" என்னும்படி பெருமாளை முன்னே போகவிட்டுத் தான் பின்னே போனது அவருடைய நடையழகு காணவேண்டியேயன்றோ. அந்த நடையின் சிறப்பு விளங்கவே முனிவனும் யயௌ என்னாதே 'ப்ரயயௌ' என்றான். ஸுமித்திரை இளையபெருமாளுக்கு வநப்ரயாணஅநுமதி தருமிடத்து "ராமெ ப்ரமாதம் மாகார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி" என்று கூறின

வள் பெருமாளுடைய நடையழகிலே துவக்குண்ணாதே கொள்ளாய் என்றன்றோ ப்ரார்த்தித்தது. *ம்ருகாதிப இவ ஸ்ரீமாந் ஸிம்ஹவிக்ராந்தகாமீ* என்றவிடத்துள்ள ம்ருக த்துபோலன்றோ இந்த ம்ருகத்து.

இனி கண்ணபிரானுடைய நடையழகு பற்றிச் சொல்லவேணுமோ? "கானகப்படி யுலாவி யுலாவிக் கருஞ்சிறுக்கன் குழலூதினபோது, மேனகையொடு திலோத்தமை யரம்பை உருப்பசியரவர் வெள்கிமயங்கி, வானகப்படியில் வாய்திறப்பின்றி ஆடல்பாடலவை மாறினார்தாமே" என்னும்படியாகவன்றோ கண்ணபிரானுடைய உலாவுதல். இப்படிப்பட்ட நடையழகைக் கண்ணன் கானகத்திலேயன்றோ காட்டுவது. காவலிலே அடங்கி யொடுங்கி நடுங்கிக்கிடந்தவிவர்களுக்கு அந்நடையழகுகாண அவகாசமேது. *விண்ணின்மீதமரர்கள் விரும்பித்தொழ மிறைத்தாயர்பாடியில் வீதியூடே காலிப்பின்னே யெழுந்தருளுமளவில் நடையழகு காணலாமெனினும் *சாலகவாசல்பற்றி நுழைவனர் நிற்பனராகி யிருந்தவக்காலத்திலும் கண்ணாரக் காண அவகாசமில்லாமேபோயிற்று. அவ்விழவுகள் தீர இப்போது ஆதாரத்தியும் ஆதாரமதியுங் காணக் குதுகலித்தபடி.

இதற்குமேல் சீரியசிங்காசனத்திருக்குமழகு காணவாசை. "பல்லாயிரம் பெருந்தேவி மாரொடு பௌவமெறி துவரை எல்லாருஞ் சூழச் சிங்காசனத்தேயிருந்தானைக் கண்டாருளர்" என்கிறபடியே நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறுபாயிரவர் தேவிமார்களுடனே ஸ்ரீ த்வாரகையிலே சீரியசிங்காசனத்திருந்தவழகைக் கண்டாருளரென்று கேள்விப்பட்டால் போதுமோ? அவ்வழகை நாங்கள் இங்கே காணவேண்டாவோ? இவை யன்றோ நாங்கள் விரும்பி வந்த காரியங்கள். ஆராய்ச்சியற்றவர்கள் இங்ஙனே யறியமாட்டாதே வேறேயொரு காரியம விவக்ஷிதமாயிருப்பதாகவெண்ணித் தேடிக்கிடப்பர்கள். ஆராய்ச்சிமாலையில் ஆழ விழியத்தக்க அறிஞர்களின் அறிவுக்கன்றோ இவை நிலமாவது.

இன்னமும் ஆராய்ந்தால் இன்னுமோர் இன்சுவைப்பொருள் தோன்றும். நூற்றந்தாதியில் *கலிமிக்க செந்நெல் கழனிக் குறையல் கலைப்பெருமான் ஒலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்க சீயமிராமானுசன் * என்று சீரிய சிங்கமாகச் சொல்லப்பட்ட ஜகத்குரு ஸ்வாமி ஸ்வரூபம் உள்ளுறை பொருள் வகையில் இப்பாட்டுக்கு விஷயமாதலால் அந்த ஸிம்ஹத்தைப் பற்றின ப்ரார்த்தனைகளும பாங்காகத் தெரியவரும். பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவளான ஆண்டாளுடைய அந்தரங்கத்திலுறையும் அப்பொருள்தன்னை நம்முடைய ஆராய்ச்சியின் எல்லையான பொருளாகக் கேளீர்.

[முழங்கிப் புறப்பட்டுப் போதரும்] எம்பெருமானாருடைய திக்விஜய யாத்ரையில் எங்கும் ஸிம்ஹகர்ஜனையாகவே யிருந்தபடியைச் சொன்னவாறு. 'போதருமாபோலே' என்று இங்கு உவமையாகக் கூறியிருந்தாலும் உபமாநார்த்தங்களுக்கு உபமேயந்தன்னிலேயே உபஸம்ஹாரமென்று கொள்ளக்கடவது. * இந்த்ரிந்த்ரிவ ஸ்ரீமான் * *ககநம் ககநாகாரம் ஸாகரஸ் ஸாகரோபம:, ராமராவணயோர் யுத்தம் ராமராவணயோரிவ * என்றவையுங் காண்க. அநந்வயாலங்கார ப்ரக்ரியை. [உன் கோயில் நின்று இங்ஙனே போந்தருளி] உன் கோயிலென்று ஸ்வாமியின் திருவவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரை விவக்ஷிக்கிறது. அங்குநின்றும் பெருமாள்கோயிலாகிய காஞ்சீபுரிக் கெழுந்தருளியும் திருமலைக்கெழுந்தருளியும் திருவரங்கம் பெரியகோயிலுக்கெழுந்தருளியும திருநாராயணபுரமெழுந்தருளியும்......

இங்ஙனே போந்தருளும்படியைச் சொல்லுகிறது. [கோப்புடைய சீரியசிங்காசனத்திருந்து] சிங்காசனம், சீரியசிங்காசனம், கோப்புடைய சீரியசிங்காசனம் என்று மூன்று வகைப்பட்ட ஆஸனமாகக் கொள்ளவேணும். யதிராஜஸப்ததியில் "ஶாயா தாயாமதாநாம மநுதி" என்ற ச்லோகத்தின் முடிவில்—ஸஜதி யதிபதேள ஸு வேதீம் த்ரிவேதீம்* என்று எம்பெருமானர் த்ரிவேதியாகிற சிங்காசனத்திலே யெழுந்தருளியிருப்பதாகச் சொல்லிற்று. இதன் பொருளை ஒரு வ்யாக்யான கர்த்தாவும் உள்ளபடி உரைத்திலர்;=த்ரயாணும் வேதாநாம் ஸமாஹார: த்ரிவேதீ; மூன்று வேதங்கள் என்றபடி. ரிக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் ஆகிற மூன்று வேதங்களும் எம்பெருமானர்க்குச் சிங்காசனமாயிருந்தனவாக உரைப்பது சிறப்புடையதன்று. ஸேதச்ருதி, அபேதச்ருதி, கடகச்ருதி என்று மூன்ருக வகுக்கப்பட்ட ச்ருதிகளே த்ரிவேதியாக வேதாந்ததேசிகனுக்கு விவக்ஷிதம். அத்வைதிகளுக்கு அத்வைத ச்ருதியொன்றே ஆஸனமாயிற்று; த்வைதிகளுக்கு த்வைதச்ருதியொன்றே ஆஸனமாயிற்ற; நம் ஸ்வாமிக்கோ வென்னில் அந்தவுபயச்ருதிகளோடுகூட கடக ச்ருதியும் ஆஸனமாயிற்று. அதாவது, ஸ்வாமி ஒரு ச்ருதியையும் தள்ளாமல் மூன்று ச்ருதிகளையும் முக்யார்த்தமாகவே கொண்டருளி விசிஷ்டாத்வைத தர்சன நிர்வாஹம் செய்தருளினபடியால் இவர்க்கு அம் மூன்று வேதபாகங்களும் சீரிய சிங்காசனமாயிருந்தனவென்கை. இப்படிப்பட்ட ஆசார்ய ஸார்வபௌமரிடத்தே வந்து சேர்ந்த சிஷ்யர்கள் யாம்வந்த காரியமாராய்ந்தருளென்றது— ஆழ்ந்து ஆராய்ந்தறியவேண்டிய பொருள்களை ஆராயுமாற்றலை யருள்க என்றபடி. (23)

## 24 இரக்க மாலை

*அன்றிவ்வுலகப்பாசுரத்தினீற்றடியில்* இன்றுயாம் வந்தோமிரங்கேலென்றுப்பதை நோக்கியது இம்மாலைக் குறிப்பு. கண்ணபிரானை நோக்கி இரங்கவேணும் பிரானே! என்று ப்ரார்த்திக்கப்படுகிறது. *நாஹௌ வசஷாஷகாரேண நமாவயேநயநஹேதநா। கேவலம் ஸ்வெயைவாஹா வ்ருக்ஷே கமிகஂ கஷாநா* என்றும், *நிஹேதுககடாக்ஷேண ஸதீயேந ஸஹாஸதே। வ்ராவெய்ராஹஂ நாநயா வ்ராவய:* என்றும் அவன்தான் சொல்லிவைத் திருக்க, கடாக்ஷித்தருளவேணுமென்றும் இரங்கவேணுமென்றும் தத்வவித்துக்கள் ப்ரார்த்திக் கத்தகுமோவென்று ஶங்கிக்கக்கூடிய துண்டு. கடாக்ஷிப்பதும் இரங்கியருள்வதும் அவன் திருவுள்ளத்தினுலாகுமத்தனையல்லது ஒருவருடைய ப்ரார்த்தனையினுலாக்கக்கூடியதன்றுதான், ஆனாலும் அது புருஷார்த்தமாக வேண்டியதற்காக ஸ்வரூபநிஷ்டைஷசமாயும் சைதந்ய கார்யமாயும் இத்தலையில் ப்ரார்த்தனை யுண்டாகிறது. நம்முடைய ப்ரார்த்தனைக்காக அவன் இரங்கினனென்றோ கடாக்ஷித்தானென்றோ தத்வவித்துக்கள் ஒருகாலும் நினையார்கள். நம்முடைய வாய்படைத்த ப்ரயோஜநம் பெறுவதற்காக நாம் எம்பெருமானை நோக்கி ஏதோ சொல்லவேண்டியது கடமையாகிறது, "ஸாஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி" என்றபடி நாப் படைத்த ப்ரயோஜனம் பெறுகைக்கு எம்பெருமானைத் துதிக்கவேண்டியது அவசரநீய மாகிறது. * நஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் * என்று கீதாசார்யன் சொன்னபடி எதையாவது [த்ருணச்சேதகஷ்டாதிகள்போன்ற காரியங்களைச்] செய்து கொண்டும், வாய்மூடியிருக்க முடியாமல் பேசிக்கொண்டும் போதைப் போக்கவேண்டியிருக் கிறது. அங்ஙனே நிகழும் வாய்ப்பேச்சுக்களிலே "நஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்" என்றதை நோக்கி நன்ருன வார்த்தைகளைப் பேச விரும்பி பகவத் பாகவத ஆசார்ய விஷயங்களிலே நாவைச்செலுத்தித் துதிகள் செய்கிறோம். அப்படிப்பட்ட துதிகளில் எதா

வதொரு வினைமுற்று [க்ரியாபதம்] இடவேண்டியதாகிறது. *உன்னைநானடைந்தேன்* உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன்* உனக்கு அடிமைத் தொழில் பூண்டேன் * உன்னையெங்ஙனம் விடுகேன்* உனக்குப் பல்லாண்டு கூறுவன் *ஒருநாள் காணவாராய்* என்னை நீகுறிக் கொள்ளே* ஒருவனடியேனுள்ளான்* என்றிப்படி பலபலவகையாகப்பேசுமடைவிலே *அடியேனிடரைக் களையாயே *நெடியாய்! அடியேனிடர் நீக்கே* அடியேற் கொருநாளிரங்காயே* *தாமரைக் கண்களால் நோக்காய்* என்றிங்ஙனேயும் வார்த்தைப்பாடுகள் வெளிவருகின்றன. இவையெல்லாம் பர்யாயேண ஸமாநார்த்தகங்களே யென்று கொள்ளலாம். *உன்னை நானடைந்தேன்* என்பதும் *அடியேற்கு இரங்காய்* என்பதும் ஸமாநார்த்தகமாக ஆய்விடுமோ வென்று பௌநருக்த்யம்பண்ண எழவேண்டாம். பெரும்பாலும் ஒரேவகையான பாவவ்ருத்தியோடே சொல்லும் வார்த்தைகளே இவையெல்லாம் என்றுணர்க.

* ஸர்வஜ்ஞோபி ஹி விஶ்வேஶ: ஸதா காருணிகோபி ஸந் । ஸம்ஸார தந்த்ர வாஹித்வாத் ரக்ஷாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே* என்பது நூற் கொள்கையாகையாலும், (முமுக்ஷுப்படியில் 163.) "இவன் அர்த்திக்க வேணுமோ? ஸர்வஜ்ஞன் இவனினை வறியானோ வென்னில். இவன் பாசுரம் கேட்டவாறே திருவுள்ளமுகக்கும்" என்று பிள்ளை யுலகாசிரியரு மருளிச் செய்கையாலும் "கடாக்ஷித்தருள வேணும்" இத்யாதி ப்ரார்த்தனைகளுக்கு விஶேஷித்து ஒரு பொருளும் கிடையாது. இரங்க வேணு மென்று நாம் வேண்டினால்தான் அவன் இரங்கியருள்வன் என்று நினைக்குமவர்களல்லர் இவர்கள். "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்வாஹண நிபுண:" என்று தேசிகன் நிஷ்கர்ஷித்தபடியும் அதற்கும் நிதாநமாக "வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே ஶரணமிதி வசோபி நோதியாத்" என்று ஆழ்வானருளிச்செய்தபடியும், அதுதனக்கும் நிதாநமாக "அதுவுமவனதின்னருளே" என்று ஆழ்வார் தாமருளிச் செய்தபடியும் அத்தலையில் நினைவாலே வெளிவருமிந்த வார்த்தைகளில் எவ்விதமான பௌநருக்த்யத்திற்கும் அவகாஶமில்லையென்க.

இரங்கு என்பதற்கு தயை பண்ணவேணுமென்று பொருள். தயைபண்ணவேணு மென்பது ஸமயாநுகுணமாகப் பலபல பொருள்களைத் தாங்கி நிற்கும். உதாரனிடத்திலே யாசகன் சென்று தயை பண்ணவேணுமென்றால் தேஹி யென்ற பொருள்படும். ஆசாரியன் பக்கலிலே ஶிஷ்யன் வந்து தயை பண்ணவேணுமென்றால் அடியேனுக்கு உபதேஶிக்க வேணுமென்றதாகும். ப்ரபுவினிடத்திலே குற்றவாளன் வந்து தயைபண்ணவேணுமென்றால் க்ஷமித்தருளவேணுமென்றதாகும். இங்ஙனே பல்வேறு பொருள்களை ஸந்தர்ப்பாநுகுணமாகத் தரக்கடவதான இச்சொல் * இன்று யாம் வந்தோமிரங்கு * என்ற இவ்விடத்தில் எப்பொருளைத் தருகின்றதென்னில்; கேண்மின். சித்ரகூட பரிஸரத்தில் காகன் வந்து நலிந்தபோது பெருமாளைத் துயிலெழுப்பின பிராட்டி * ஸ மயா போதித: ஶ்ரீமாந் ஸுகஸுப்த: பரந்தப: * என்று, கெட்டேன்! கெட்டேன்!! துயில் கொள்ளுமழகு கண்ணாரக் கண்டு கொண்டேயிருக்கவேண்டியிருக்க, ஐயோ! பாவியேன் துயிலுணர்த்திவிட்டேன்! என் செய்தேன்! என் செய்தேன்!! என்று பலவாண்டுகள் கடந்த பின்புங்கூட அக்ருத்ய கரணம் பண்ணினாற்போலத் துடிக்கவேண்டியிருந்தது. இஃதறிந்தவைத்தும் நாங்கள் கோயில் காப்பானையும் வாசற்காப்பானையும் நிர்ப்பந்தமாக வேண்டி உள்ளே புகுந்து பரம போக்யமான பள்ளிகோளை பங்கப்படுத்தினோமே! இதனில் மிக்கோர் குற்றமுண்டோ?

இதனை க்ஷமித்தருளவேணும்; (2) புஷ்பஹாஸ ஸுகுமாரதரமான திருவடிகளன்றோ இவை;
பங்கஜரஜஸ்ஸும் வாதாரஞ்ஞம் மாம்படி [illegible]
ஸாரிணிகளான பிராட்டிமாரும் பிடிக்கக் கூசும்படியான இத்திருவடிகளைக் கொண்டு
நடக்கப் பண்ணினோமே! * இங்ஙனே போந்தருளி* என்று நாங்கள் சொல்லத்தகுமா?
இப்பெரிய குற்றத்தைப் பொறுத்தருளாய்- (3) அகில ஹேயப்ரத்யநீகனாய் கல்யாணை
கதானனாய் ஸகல ரக்ஷகனாய் ஸர்வேச்வரனான உன்னைக் கொண்டு எங்களுக்குண்டான அமங்
களங்களைப் போக்கிக் கொள்ளவும் இல்லாத மங்களங்களை உண்டாக்கிக் கொள்ளவும் ப்ராப்
தமாயிருக்க, எங்களுடைய ரக்ஷ்யத்வத்திற்கு விருத்தமாக உன்னை ரக்ஷிக்கத்தேடி
மங்களாசாஸநம் பண்ணினோமே; [illegible] செய்யுமதை நாங்கள் செய்தது அநு
சிதமத்தனையிறே. யாருடைய நிலைமையை யாரநுகரிப்பது பிரானே! க்ஷமித்தருளாய் இதனை.

*[illegible]* என்று பட்டரும், *[illegible]*
என்று தேசிகனும் பணித்தபடியே [illegible] புக்குப்பெருகும் பொருளொன்றுகேளீர்;
"இன்று யாம்வந்தோமிரங்கு" என்றவிடத்தில் இலக்கணப்படி 'இன்றுயாம்' என்னக்கூடாது;
இன்றியாம் என்றே சொல்லவேணும். இன்று+யாம், சந்தியாமிடத்து "யவ்வரினிய்யாம்"
என்ற நன்னூற் சூத்திரத்தின்படி (இன்றியாம்) என்றேயாகும், மற்று+யான், மற்றியான்;
மற்று+யாதும், மற்றியாதும் என்பனபோலே. ஏவஞ்ச, மூலத்திலுள்ள சொல் வடிவம்
(இன்றியாம்) என்பதேயாகும். இங்குப் பிரிக்கும்போது இன்று என்றே பிரிக்கவேணு
மென்கிற நிர்ப்பந்தமில்லை; இன்றி என்றும் தாராளமாகப் பிரிக்கலாம். இன்றி—ஒருவகை
யான கைம்முதலுமின்றி என்றபடி. * நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன் * இட
கிலேன் ஒன்றட்டகில்லேன் ஐம்புலன் வெல்லகில்லேன், கடவனாகிக் காலந்தோறும் பூப்பறித்
தேத்தகில்லேன் * [illegible] * இத்யாதிப்
படியே அகிஞ்சநர்களாய் வந்தோமென்று கையை விரித்துக்காட்டி, உன்னுடைய இரக்கத்
திற்குத் தண்ணீர்த் துரும்பாக எங்கள் கையிலே ஏதுமில்லாமையாலே தாராளமாக இரங்கி
யருளலாமென்கிறார்களாயிற்று. ... ... ... (24)

## 25. வருத்தந்தீர்மாலை

* ஒருத்திமகன் பாசுரத்தினீற்றடியில் * வருத்தமுந்தீர்ந்து மகிழ்ந்தென்றிருப்பதை
நோக்கியது இம்மாலைக் குறிப்பு. வருத்தம் தீர்ந்தது எதனாலேயென்பதை நாம் ஊஹித்தறிய
வேண்டாதபடி அது பாசுரத்திலேயே பொறிக்கப்பட்டுளது. திருத்தக்க செல்வமும் சேவக
மும் பாட, அதனால் வருத்தம் தீர்ந்ததாகச் சொல்லப்பட்டிராநின்றதிறே. அப்பாடலின்
பொருள்கேளீர். [திருத்தக்க செல்வம்.] * துல்ய சீலவயோ வ்ருத்தாம் துல்யாபிஜந லக்ஷணாம்,
ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேய மஸிதேக்ஷணா* என்று திருவடி சொன்னபடியே பிராட்
டிக்குத் தக்க பெருமாளும், பெருமாளுக்குத்தக்க பிராட்டியுமாக அமைந்த தகுதியான செல்
வத்தைப் பாடிக்கொண்டே வந்தோமென்பது அந்யாபதேசத்தில். ஸ்வாபதேசத்திலோ
வென்னில்; பெரிய பிராட்டியாரோடொத்த செல்வமுடையவர் ஸ்வாமி யெம்பெருமானார்.
நம்போல்வார்க்குப் புருஷகார க்ருத்யம் பண்ணி எம்பெருமானடி சேர்ப்பிக்கையே பிராட்
டிக்குச் செல்வம். இதுவேதான் எம்பெருமானார்க்கும் செல்வமாகும். அவருடைய திருவடி
ஸம்பந்த மில்லாதார்க்கு மோக்ஷமில்லை யென்பது ஸம்ப்ரதாயம். [சேவகமும் யாம்பாடி.]

இரட்டுற மொழிதலால் சேவகமென்கிற சொல் பரத்வ ஸௌலப்யங்களைச் சொல்லும். தமிழில் சேவகமென்று வீரத்திற்குப் பெயராதலால் பரத்வம் தெரிவிக்கப்பட்டதாகும்; வட மொழிவிகார மென்று கொண்டால் ஸேவகவ்ருத்தி செய்வதென்று பொருள்பட்டு ஸௌலப்யம் தெரிவிக்கப்பட்டதாகும்.

திருத்தக்க செல்வம் என்பது திருத்தத்தக்க செல்வமென்றபடியுமாகும்; * ஒண் சங்கதை வாளாழியான் போலே. * பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்வான் * என்றும், * இராமானுசா!— நீயிந்த மண்ணகத்தே திருத்தித் திருமகள் கேள்வனுக்காக்கியபின் * என்றும் சொல்லுகிறபடியே * உலகில் திருந்தாதார் தம்மைத் திருத்துகையாகிற செல்வமன்றோ ஆசாரியர்களுடையது. * பணிமானம் பிழையாமே யடியேனைப் பணி கொண்ட * என்றவிடத்து (ஈட்டில்) ஐதிஹ்யம் கண்டு அநுஸந்திப்பது. "ஶாஸிதா ஸாவிதாரஃ" என்பதன்றோ ஆசார்ய லக்ஷணங்களில் தலையானது. [சேவகமும்] கண்ணனிடத்திலே பரத்வ ஸௌலப்யங்கள் மாறி மாறி விளங்கினாப் போலே ஆசார்யர்களிடத்தும் இங்ஙனே காணாநின்றோம். அவர்களது ஞான விளக்கத்தை நோக்கும் போது பரத்துவம் தோன்றும். அவர்கள் ஸம்ஸாரிகளோடும் புரையறக் கலந்து பழகும் படியை நோக்கும்போது ஸௌலப்யம் தோன்றும். ஆக இவற்றையெல்லாம் சிந்தை செய்வார்க்கு வருத்தங்கள் தீர்ந்து மகிழ்ச்சியேயாகுமென்னத் தட்டுண்டோ?

திருத்தக்க செல்வம் என்பதற்கு உட்புகுந்து ஆராய்ந்து அறியக்கூடிய சீரிய பொருளொன்று கேளீர். நம்முடைய ஸம்பிரதாயத்தில் வ்யவஹாரங்களெல்லாம் திரு என்னுஞ் சொல்லின் சேர்த்தியினாலே மிகச் சிறப்புப் பெற்றிருக்கும். பிறர் அபிஷேக மென்பர்; நாம் திருமஞ்சனமென்போம். பிறர் பாத மென்பர்; நாம் திருவடி யென்போம். பிறர் துளஸி யென்பர்; நாம் திருத்துழாயென்போம். பிறர் ஆராதன மென்பர்; நாம் திருவாராதன மென்போம். பிறர் ஶயனித்தல், நித்ரை செய்தல் என்பர். நாம் திருக்கண் வளர்தலென்போம். பிறர் ஆடிப்பூரமென்பர். நாம் திருவாடிப் பூரமென்போம். இங்ஙனே அளவு கடந்த வ்யவஹாரவாசிகள் காணலாம். நம்மாழ்வார் ப்ரதமப் ப்ரபந்தத்தில் "திருமாலுரு வொக்கும்மேரு, அம்மேருவில் செஞ்சுடரோன் திருமால் திருக்கைத் திருச்சக்கர மொக்கும், அன்ன கண்டும் திருமாலுருவோடு அவன் சின்னமே பிதற்றா நிற்பதோர் திருமால் தலைக் கொண்ட நங்கட்கு எங்கே வரும் தீவினையே." என்றொரு பாசுரமருளிச் செய்துள்ளார். இதில் திரு என்னுஞ் சொல் நிரம்பியிருக்கிற தென்கைக்காக இப்பாட்டை நாம் எடுத்துக் காட்டினோமல்லோம்; இதில் ஈற்றடியில் * திருமால் தலைக் கொண்ட என்றவிடத்தில் மால் என்னுஞ் சொல்லுக்கு வியாமோஹம் என்று பொருள்; பைத்தியம் என்றபடி. அதற்கும் திருவைச் சேர்த்தாராழ்வார் என்கிற அதிஶயத்தைக் காட்டவே இப்பாட்டை யெடுத்தோம். ஆக,- திருத்தக்க செல்வமாவது திருவென்னும் சொற் சேர்த்தியினால் விளைந்த ஸம்பிரதாயச் செல்வம். இப்படிப்பட்ட விலக்ஷண ஸம்பிரதாயத்திலே நாம் ஜனிக்கப் பெற்றோமேயென்று சிந்தனை செய்யச் செய்ய வருத்தமெல்லாம் தீர்ந்து மகிழ்ச்சியுண்டாகுமன்றோ.

அன்றியும், * திருவுக்குந் திருவாகிய செல்வா! * என்று ஆழ்வாரும், * கஃ ஸ்ரீஃ ஸ்ரியஃ * என்று ஆளவந்தாரும் பேசும்படியான செல்வமே திருத்தக்க செல்வம். நம்மாழ்

வார் * சுவையன் திருவின்மணாளன் * என்றருளிச் செய்தார்; அங்கு வ்யாவ்யாதாவான உ-ஹௌசர்கள் "[சுவையன்] பரமரஸிகன். இந்த ரஸிகத்வத்துக்கு ஊற்றுவாய் சொல்லுகிறது திருவின்மணாளன்...பெரிய பிராட்டியார் * அகலகில்லேனென்னப் பிறந்தவன்." என்றருளிச் செய்தனர். * திருத்தக்க செல்வமென்பதைப் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். இதற்குத் தனியேயொரு புத்தகமிடவேணுமென்று கொண்டு நிற்கிறோமிப்போது. இதற்கு மட்டுமென்ன? ஒவ்வொரு மாலைக்கும் ஒவ்வொரு தனிப்புத்தகமிடவேண்டியதே. இட்டால் அது காநநசந்த்ரிகையாகாமே உபயோகங் கொள்ள உபந்யாஸகர்கள் எங்கும் பலிந் திருக்கையாலே ஆனந்தமாக இடுவோம் விரைவில். ... ... (25)

## 26. ஆலினிலையான்மாலை.

* மாலே மணிவண்ணா பாசுரத்தின் ஈற்றடியில் * ஆலினிலையாயருளென்றிருப்பதை நோக்கியது இம்மாலைக்குறிப்பு. யசோதைப் பிராட்டி கண்ணனை ஆலிலைத்துயின்ற குழவியாகவே அடிக்கடி சொல்லுவள். அம்புலியையழைக்குமிடத்து "பாலகனென்று பரிபவஞ் செய்யேல், பண்டொருநாள் ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன்" என்றாள்; செங்கீரையாட வேண்டும்போது *உய்ய வுலகுபடைத்துண்டமணிவயிறா.......ஆலினிலையதன்மேல் பைய வுயோகு துயில்கொண்ட பரம்பரனே!* என்றாள். *அக்காக்காய் நம்பிக்குக் கோல்கொண்டு வாவென்னும்போது "*ஆலத்திலையானரவினணைமேலான்" என்றாள். பூச்சூடவாராயென்றழைக்கும்போது * உண்டிட்டுலகினையேழும் ஓராலிலையில் துயில்கொண்டாய் * என்றாள். இங்ஙனே அபரிமிதம். எம்பெருமானுடைய அற்புதமான செயல்களுள் * ஞாலமேழுமுண்டு ஆலமாமரத்தினிலைமேல் ஒரு பாலகனாய்த் துயின்றசெயலுக்கு ஈடானது எதுவுமில்லை. ஒரு பெரியபாசுரம் இட்டருளி இக்கதையைப் பரமபோக்யமாகப் பேசினவர் நம்மாழ்வாரொருவரே. திருவாசிரியத்தின் நிகமனப்பாசுரம் "நளிர்மதிச்சடையனும் நான்முகக்கடவுளும், தளிரொளியிமையவர் தலைவனுமுதலா, யாவகையுலகமும் யாவருமகப்பட, நிலநீர் தீகால் சுடரிருவிசும்பும், மலர்சுடர் பிறவும் சிறிதுடன்மயங்க, ஒருபொருள் புறப்பாடின்றி முழுவதுமகப்படக்கரந்து, ஓராலிலைச்சேர்ந்த எம்பெருமா மாயனையல்லது, ஒருமாதெய்வம் மற்றுடையமோ யாமே." என்று வெகு அற்புதமாக அமைந்துள்ளது. இதைச்சிறிது விவரித்து அநுபவிப்போமிங்கு. *நளிர்மதிச்சடையனென்னுமிப்பாட்டின் கீழ்ப்பாட்டில் ஆழ்வார்க்கு ஒரு பெரிய துயரமுண்டாயிற்று. (அதாவது) ஸகல சேதநர்களும் ப்ராப்தசேஷியான எம்பெருமானையடிபணிந்து அவனுக்கே வழுவிலாவடிமைகள் செய்ய ப்ராப்தமாயிருக்க அது செய்யாதே தேவதாந்தரங்களை பஜிப்பதும் ஜீவஹிம்ஸாரூபமான கொடிய காரியங்களாலே அந்த க்ஷுத்ரதெய்வங்களை ஆராதிப்பதுமாயிருந்து ஸம்ஸாரத்தையே பூண்கட்டிக்கொள்ளுகிறார்களே! அந்தோ! இஃது என்ன அநீதி! என்று துயருற்றார். ஒரு ஸம்ஸாரியும் ஆழ்வாருடைய துயரத்தைப் பரிஹரிக்க முன்வராமற்போகவே, இப்பாழும் ஸம்ஸாரிகள் எக்கேடாவது கெடட்டும்; நாமும் இவர்களைப் போலே அனர்த்தப்பட்டுப் போகாமே எம்பெருமானுக்கே அடிமைப் பட்டிருக்கப் பெற்றோமேயென்று உகந்து அவ்வுகப்பை வெளியிடுகிறாரிப்பாட்டில். ஸம்ஸாரிகள் பஜிக்கின்ற பிறதெய்வங்கள் யாவும் நம்மைப் போலவே பலவகை ஆபத்துக்களுக்கு உள்ளாகி எம்பெருமானுடைய திருவருளால் தப்பிப் பிழைப்பவர்களேயொழிய, தங்களுடைய ஆபத்துக்களைத் தாங்களே பரிஹரித்துக் கொள்ளவோ, பிறருடைய ஆபத்துக்களைத் தாங்கள் பரிஹரிக்கவோ ஆற்றலுடையவர்களல்லர் என்பதை

விளக்க வேண்டி, இந்தத் தெய்வங்களெல்லாம் பிரளயகாலத்தில் எம்பெருமானது திருவயிற்றிலே யொடுங்கிக் கிடந்து ரக்ஷை பெற்றவை காண்மினென்றும், சிவனும் பிரமனும் தேவேந்திரனும் முதலான எல்லாப் பிராணிகளும் எல்லா வுலகமுமுட்பட சிறியதான திருவயிற்றின் ஒருபக்கத்திலே கலசும்படியாக உள்ளேயிட்டு மறைத்து ஒரு சிற்றாலந்தளிரிலே பள்ளி கொண்ட ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைத் தவிர்த்து வேறொரு க்ஷுத்ரதேவதையைநாம் சேஷியாகக் கொள்ளுவோமோ? கொள்ளமாட்டோம—என்று இத்தகைய அத்யவஸாயத்தினால் தாம் வாழ்ந்தபடியைச் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. ஆக, ஆலினிலையானுடைய இதிஹாஸம் இதர தெய்வங்களின் அவரத்வத்தையும் ஸ்ரீமந் நாராயணனுடைய வரத்வத்தையும் கையிலங்கு நெல்லிக்கனியாகத் தெரிவிக்க அவதரித்ததாயிற்று.

இவ்வளவேயன்று; எம்பெருமானுடைய வொரு அத்புத ஸக்தியோகத்தையும் விளக்கவந்தது இவ்விதிஹாஸம். பொய்கையாழ்வார் தம்முடைய திருவந்தாதியில் "பாலன் தனதுருவாயேழுலகுண்டு, ஆலிலையின்மேலன்று நீவளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று வேலை நீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ,? சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு" என்றொரு பாசுரத்தினால் ஆலின்மேலாலமர்ந்த திருமாலை நோக்கி ஒரு கேள்வி கேட்டிருக்கிறார். அது வெகு சமத்காரமான கேள்வியாகவுள்ளது. மஹா ப்ரளயத்திலே இந்த விபூதி அழியாதபடி திருவயிற்றிலே இதனை வைத்துக்கொண்டு அப்ராக்ருதமான உனது திருமேனியைச் சிறுக்கி ஒரு சிறுகுழவி வடிவத்தைக் கொண்டவனாகி, ஸயனிப்பதற்குச் சிறிதும் பற்றாத ஒரு ஆலந்தளிரில் நீ பிரளயகாலத்தில் ஸயனித்தருளினையென்று பரம ஆப்தர்களான முனிவர் மொழிகின்றனர். 'எத்திறம்!' என்று நினைந்துநைந்து ஈடுபடும்படியான இச் செயலானது முன்பு கிருஷ்ணாவதாரத்தில் ஏழுபிராயத்தில் * அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கவமுதுசெய்து ஏழுநாள் ஒரு சேரக் கோவர்த்தன மலையை யெடுத்துக் குடையாகப்பிடித்து நின்ற அரும்பெருஞ் செயலைக் காட்டிலும் மிக மிக ஆச்சரியமாயிருக்கின்றது; நீ கண்வளர்ந்த அந்த ஆல் பிரளயவெள்ளத்தில் தோன்றியதோ? விண்ணில் தோன்றியதோ? பிரளயத்தில் கரைந்துபோன மண்ணிலிருந்துதான் தோன்றியதோ? இதன் வரலாற்றை விளங்கச்சொல்லவேணுமென்பது கேள்வி. ஸர்வஜ்ஞனை ஸர்வேச்வரனும் விடையிறுக்ககில்லானென்று ஆழ்வாருடைய திருவுள்ளமென்பது சொற்போக்கில் தெரியாநின்றது. இங்ஙனேயொரு சரிதையை நடத்திக்காட்டின திருமாலின் திருவுள்ளந்தானென்? என்னில்; தன்னுடைய அகடிதகடநா ஸாமர்த்தியத்தினால் நேரும் அதிமாநுஷ சேஷ்டிதங்களிலும், மற்றும் வேதாந்த ஸ்ருதிவாதிதங்களாய் பொருந்தமற்றனவபோல் தோன்றுபனவயான விஷயங்களிலும் ச்ருதைகமூலமான சோத்யங்களைச் செய்யத் தகாதென்று ஸிக்ஷிப்பதேயாகும். இது ஸாரீரகமீமாம்ஸையில் தேர்ந்த பொருள். அதில் இரண்டாமத்யாயத்தின் முதற்பாதத்தில் *க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வ ஸப்தகோபோ வா* என்பதொரு ஸூத்ரம். இது பூர்வபக்ஷ ஸூத்ரம். * ச்ருதேஸ் து சப்தமூலத்வாத் * என்பது ஸித்தாந்த ஸூத்ரம். ப்ரஹ்மம் ஜகத்காரணம் என்னும் வாதத்தில் ப்ரஹ்மமே ஜகத்தாகப் பரிணமிப்பதாய்த் தேறுகிறது. ப்ரஹ்மமோ நிரவயவமானது; அது ஜகத்தாகப் பரிணமிக்கும்போது ப்ரஹ்மம் முழுவதுமே காரியப்பொருளாகப் பரிணமிக்கவேண்டியதாகிறது. ஏகதேசேந பரிணமிக்கிறதென்னும் பக்ஷத்தில் ப்ரஹ்மம் நிரவயவமென்று சொல்லுகிற ச்ருதி விரோதிக்கும். ஆகையாலே ப்ரஹ்மம் ஜகத்காரணமாகவொண்ணாது—என்கிற பூர்வபக்ஷமே முந்தின ஸூத்ரத்

தின் பொருள். (இதைச் சிறிது விவரிப்போம்.) கீழே உபஸம்ஹாராதிகரணத்தில் *க்ஷீர வஜ்* என்று க்ஷீரத்ருஷ்டாந்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. க்ஷீரத்ருஷ்டாந்தம் பொருந்தாது. க்ஷீரம் ஸாவயவமாகையாலே அதுபோல ப்ரஹ்மமும் ஸாவயவமென்னவேணும். அப்படிகொண்டால் நிரவயவத்வ ச்ருதி கோபிக்கும்; நிரவயவமாகில் ப்ரஹ்மம் க்ருத்ஸ்நஹாமத்தாலும் பரிணமமடைந்ததாக வேணும். ஆகட்டுமேயென்னில் க்ருத்ஸ்நமும் ஒரு காரியப்பொருளாகப் பரிணமிக்க ப்ரஸக்தியில்லை. ஆகையாலே ப்ரஹ்மகாரணத்வவாதம் ஒவ்வாது—என்பதாகப் பூர்வபக்ஷம். இதன்மேல் ஸித்தாந்தமுணர்த்தும் ஸூத்ரம்—*ச்ருதேஸ்து சப்தமூலத்வாத்* என்பது. துசப்தம் பூர்வபக்ஷத்தை வ்யாவர்த்திப்பிக்க வந்தது. ப்ரஹ்மம் நிரவயவமென்பதும், அது கார்யப்பொருளாகப் பரிணமிக்கிற தென்பதும் ஆகிய இரண்டும் ச்ருதிஸித்தமான அர்த்தங்கள். ப்ரஹ்மமோ சப்த ப்ரமாணமொன்றினாலேயே அறியப்படுவது; ஆகையாலே கீழே தோன்றின பூர்வபக்ஷம் யுக்தமன்று என்பதாக ஸூத்ரார்த்தம். இதையும் சிறிது விவரிப்போம். ஸாவயவமான வஸ்துதான் ஏகதேசத்தாலே பரிணமிக்க முடியுமென்றும், நிரவயவமான வஸ்துவானது அப்படி ஏகதேசத்தாலே பரிணமிக்கமாட்டாமல் க்ருத்ஸ்நாம்ஸத்தாலும் பரிணமித்தாகவேணுமென்றும் ஒரு நியதி சொல்லுவதானது லௌகிக பதார்த்த த்ருஷ்டியினால்தானே. இப்படியொரு வ்யாப்தி கல்பிக்க வேணுமானால் பரப்ரஹ்மம் தவிர மற்ற வஸ்துக்களில் மாத்திரமே கல்பிக்கலாம். ப்ரஹ்மத்தினிடத்திலும் இந்த வ்யாப்தி கொள்ள அவசியமில்லை; ஏனெனில், ப்ரஹ்மத்தை நாம் சாஸ்த்ரங்கொண்டே அறிகிறோம். அந்த சாஸ்த்ரமானது ப்ரஹ்மத்திற்கு நிரவயவத்வத்தையும் பஹுபவனத்தையும் [அதாவது, நாநாவஸ்துக்களாகப் பரிணமிப்பதையும்] ஓதியிருக்கின்றது. அது ப்ரஹ்மத்தினுடைய அநிர்வசநீயமான சக்தி விசேஷத்தைப் பொறுத்தது. அத்புத சக்தியுக்தமான ப்ரஹ்மத்தினிடத்திலே நாம் லௌகிகவஸ்து த்ருஷ்ட்யா சோத்யம் செய்வது தகாது. ஒன்று பாருங்கள். கண்ணுடையவன்தான் காணமுடியும், காதுடையவன்தான் கேட்கமுடியும்; கண்ணிலாதான் காணகில்லான்; செவியிலாதான் கேட்ககில்லான்—என்று ஒரு வ்யாப்தி சொல்ல நினைத்தால் பரப்ரஹ்மந்தவிர மற்ற பேர்களிடத்தில்தானே இப்படிச் சொல்ல முடியும். *அபாணிபாதோ ஜவநோ க்ரஹீதா பஶ்யத்யசக்ஷு: ஸ ஶ்ருணோத்யகர்ண:* என்று ஓதப்படுகிற பரம்புருஷனிடத்திலே இந்த வ்யாப்தி பயன்பெறாதன்றோ. ஆகவே உலகில் காணும் நியாயத்தைக் கொண்டு ப்ரஹ்மத்தினிடத்தில் சோத்யம் செய்வது கூடாது.

வேதாந்திகள் இங்கு விசேஷித்துக் குறிக்கொள்ளவேண்டிய விஷயமுண்டு: பரப்ரஹ்மத்திற்கு ஜகதாத்மநா பரிணாமம் போலவே ப்ரதிவஸ்து பூர்ணத்வமும் ச்ருதிஸித்தமாயிருக்கின்றது. நிரவயவமான ப்ரஹ்மம் வஸ்துதோறும் எங்ஙனே பரிஸமாப்ய வர்த்திக்க முடியும்? என்று சிலர் சோத்யம் செய்வதுண்டு. அந்த சோத்யமும் * ச்ருதேஸ்து சப்தமூலத்வாத் * என்கிற இந்த ஸூத்ரத்தினால் சிக்ஷிக்கப்பட்ட ந்யாயத்தினாலேயே மடிந்தொழிகின்றது. இவ்விஷயத்தை ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் வெகு சதுரமாக அருளிச்செய்து முடித்திருக்கிறார். அப்படியிருந்தும் இதில் இன்னமும் சிலர் தெளிவுபெறாமல் கலங்கியிருக்கிறார்கள். பகவான் ஒரு வஸ்துவிலே பரிஸமாப்ய வர்த்தித்துவிட்டால் அவ்வளவோடு பகவான் உபக்ஷீணனாய் விடுகிறபடியால் மற்றொரு பொருளில் வியாபிக்க எப்படி முடியுமென்று இந்த சோத்யத்தையே திருப்பித்திருப்பிச் செய்துகொண்டு காலங் கழிக்கிறார்கள். அந்தோ! அன்னவர்கள் * ச்ருதேஸ்து சப்தமூலத்வாத் * என்கிற ஸூத்ரம் என்ன சிக்ஷிக்கிறதென்பதையும் இந்த ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி என்ன அருளிச்

செய்கிருரென்பதையும் சிறிதும் நோக்கமாட்டிற்றிலர். * ஸர்வேச்வரோணகவேந 'வாக ஞெதாவஷு விஜாதீயகவாநவஸ்யாயவுஸ்ய விதிருஶக்தியொறொ நவிர யூதெ* என்பது ஸ்ரீபாஷ்ய ஸூக்தி. இதைப்பற்றின விரிவுகளை நம்முடைய ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா, அத்புதசக்தி முதலான க்ரந்தங்களிலே காண்க.

கூரத்தாழ்வான் * கிംஸாயநः குவிவஸநு கிஶவாநநாநः * இத்யாதியாலே பிறருடைய கூஷொஜாநூங்களை யநவஷித்து "உதூாநநிஷித கதகஶதகயஞः ஷவெஜ ஹவம் ஶ்ருதிவிஜொ விஶரவூதகஷூழ" என்று [வ்யாஸமுநி காட்டின ஒரே பத்ததியாலே] தாநரஶஜொநூங்களை நிரஸித்துத் தலைக்கட்டினூர்.

வேதாந்த தேசிகனும் அச்யுதஶதகத்தில் * வஷிஸவஹாணஸீரொ * என்னும் சுலோகத்தை * ஸூ ஸஸதூ—ஸுதஶக்தி: * என்றே தலைக்கட்டினூர். ஆலினிலையான் கதையைச் சொல்லப் புகுந்து "வொருகூநெ வடுவஷாஶ சிதவஸ்யவஸ்ய" என்கிற சுலோகத்தை, ஒருவாறு பொய்கையாழ்வாரை யடியொற்றி, வினவாகவே தலைக் கட்டினூர். அந்த வினவுக்கு விடையிறுக்க அத்புதஶக்தியோம ஶ்ரவணநமொழிய வேறு தஞ்சமில்லையிறே.

* ஆலினிலையா யருளென்பதற்கு ஆசார்ய பரமான யோஜனையில், ஆலின் நிலையாய் என்று பிரித்து, ஆல மரத்தின் நிலைமை போன்ற நிலைமையையுடையவரே! என்று பொருள் கொள்வது. "எம்பெருமான் திருவடியிலே ஒதுங்குதல் பனை நிழலிலொதுங்கினுற் போலே; எம்பெருமானுர் திருவடி நிழலிலே யொதுங்குகை ஆல நிழலிலொதுங்கினூற்போலே" என்று அம்மங்கியம்மாள் வார்த்தை. பனை நிழலின் தன்மையும் ஆல நிழலின் தன்மையும் உலகமறிந்ததே யாதலால் நாம் விவரிக்கவேண்டா. ... ... ... (26)

## 27. கூடியிருந்து குளிர்மாலை

* கூடாரை வெல்லுஞ்சீர்ப் பாசுரத்தினீற்றடியில் * கூடியிருந்து குளிர்ந்தென்றதை நோக்கியது இம்மாலைக் குறிப்பு. இன்னூரோடு கூடியிருந்தென்று சொல்லிற்றில்லையாகிலும் கூடத்தகாதவர்களை விலக்கி, கூடியேயிருக்கவேண்டியவர்களோடு கூடுகைதான் இங்கு விவக்ஷிதம். குலசேகராழ்வார் ஒரு திருமொழியிலே "மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளுமிவ் வையந்தன்னொடுங் கூடுவதில்லையான்" "நூலினேரிடையார் திறத்தே நிற்கும் ஞாலந்தன்னொடுங் கூடுவதில்லையான்" "மாரனூர் வரிவெஞ்சிலைக்கு ஆட்செய்யும் பாரினூரொடுங் கூடுவதில்லையான்" "உண்டியே உடையே உகந்தோடு மிம்பண்டலத்தொடுங் கூடுவதில்லையான்" "தீதில் நன்னெறி நிற்க அல்லாது செய் நீதியாரொடுங் கூடுவதில்லையான்" என்று பன்முறையுங் கூறினூர் கூடத்தகாதவர்களை. * வரம் ஹுதவஹஜாலாவஞ்ஜரா வஸ்யவஸ்திதிः । ந ஶௌரிசிந்தாவிமுக ஜநஸம்வாஸ வைஶஸம் — வரம ஹுதவஹ ஜ்வாலாபஞ்ஜராந்தர் வ்யவஸ்திதி:, ந ஶௌரிசிந்தாவிமுக ஜந ஸம்வாஸ வைஶஸம்* என்னும் சுலோகத்தையே அப்பாசுரங்கள் விவரித்தனவாயின. அன்னவர்களோடு கூடுவதை விலக்கிக் கொள்ளுகைதானே சிறந்த குளிர்ச்சியாகும். அதற்குமேல் கூடத்தக்கவர்களோடு கூடவும் பெற்ருல் குளிர்ச்சியைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? கூடத்தக்கவர்கள் யாவரென்னில்;

குறிக்கொண்டு கேண்மின்; * மறந்திகழு மனமொழித்து வஞ்சமாற்றி வன்புலன்களடக்கி இடர்ப்பாரத் துன்பந்துறந்து இருமுப் பொழுதேத்தி எல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டர்; * தூராதமனக்காதல் தொண்டர் தங்கள் குழாங்குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடியாராத மனக்களிப்போடழுத கண்ணீர் மழை சோர நினைந்துருகியேத்துமவர்கள்; * அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளி கொள்ளுமணியரங்கன் திருமுற்றத்தடியார்கள். * தென்னரங்கனை வாழ்த்தி மால்கொள்சிந்தையராய் ஆட்டமேவியலர்ந்தழைத்து அயர்வெய்தும் மெய்யடியார்கள்; * பேராளன் பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலே னென்றிருக்குமவர்கள்; * பழுதே பல பகலும் போயினவென்று அஞ்சியழுது கொண்டிருக்குமவர்கள். * ஶரணாகத[illegible] திவ்யக்ஷேத்ர விஹாரிகளாய் [illegible] ஸ்வாமிகளாயிருக்குமவர்கள். [illegible] [illegible]* என்று நித்ய குதூஹல ஶாலிகளாய் * மணவாளமாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை யுன்னிச் சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மை மக்கரத்தாலே தீண்டல் கடனென்கிற அத்யவஸாயத்தில் தலைநின்றிருக்குமவர்கள். அக்நிஜ்வாலையை விழுங்கி விடாய் கெட நினைக்குமா போலேயும், ஆடுகிற பாம்பின் நிழலிலே யொதுங்கி ஸேவிக்க நினைக்குமா போலேயும், விஷயப்ரவணர்களாய் ஸேவிக்க நினைப்பாருடைய திரளில் நின்றும் விலகி * உன்றன்னோடுற்றோமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம * என்றிருக்குமவர்கள். இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணர்களாய் குணாநுபவ கைங்கர்யங்களே போது போக்காயிருக்குமவர்கள். ஸர்வ ப்ரகாரத்தாலும் நாஶஹேதுவான அஹங்காரத்துக்கும் அதினுடைய கார்யமான விஷய ப்ராவண்யத்துக்கும் விளைநிலம் தானாகையாலே தன்னைக் கண்டால் ஶத்ருவைக் கண்டாற்போலேயிருக்குமவர்கள். ஸம்ஸாரிகளைக் கண்டால் ஸர்ப்பத்தைக் கண்டாற்போலேயும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் பந்துக்களைக் கண்டாற்போலேயுமிருக்குமவர்கள். ஈச்வரனைக் கண்டால் பிதாவைக் கண்டாற் போலேயும் ஆசார்யனைக் கண்டால் பசியன் சோற்றைக் கண்டாற் போலேயும், ஶிஷ்யனைக் கண்டால் அபிமத விஷயத்தைக் கண்டாற்போலேயும் குதூஹலித்திருக்குமவர்கள். தேஹயாத்ரையில் உபேக்ஷையும் ஆத்ம யாத்ரையில் அபேக்ஷையும் ப்ராக்ருதவஸ்துக்களில் போக்யதாபுத்தி நிவ்ருத்தியுமுடையராயிருக்குமவர்கள். உகந்தருளின நிலங்களில் மங்களாஶாஸந ப்ராவண்யமும் ஆஹார நியதியும் அநுகூலஸஹவாஸமும் ப்ரதிகூல ஸஹவாஸநிவ்ருத்தியுமுடையராயிருக்குமவர்கள். விஶேஷித்து, * தம் நெஞ்சில் தோற்றினதே சொல்லி உலகத்தை வஞ்சியாதே முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசுமவர்கள் நித்ய ஸஹவாஸ யோக்யர்கள். ஆசாரியர்கள் அனைவரும் முன்னாசரித்த ஆசாரந்தன்னையறியாதார் பேசுகின்ற வார்த்தைகளைக் கேட்டு மருளாதே பூருவர்கள் சீர்த்தநிலை தன்னிலே நிலைநின்றிருக்குமவர்கள் நித்யாநுபவயோக்யர்கள்.

கோவிந்தா! உன்னோடு கூடியிருந்து குளிர வேணும் நாங்கள். உன்றன் பொய்யைக் கேட்டு உன் வரவு பார்த்து யமுனையாற்றில் வார்மணல் குன்றில் பொழுது விடியுந்தனையும் நின்றிருந்து வஞ்சிக்கப் பெற்றோமாய், மீண்டொருகால் நீ எங்கள் பக்கல் வந்தவாறே * என்னுக்கவளை விட்டிங்கு வந்தாய் இன்னமங்கே நடநம்பி நீயே * என்றும் * எற்றுக்கு நீயென் மருங்கில் வந்தாய் எம்பெருமான் நீயெழுந்தருளே * என்றும் * பொய் யொரு

நாள் பட்டதே அமையும் புள்ளுவம் பேசாதே போகுநம்பீ * என்றும் * சுவரார் கதவின் புறமே வந்து நின்றீர்—ஏதுக்கிதுவென் இது வென்னிது வென்னோ* என்றும் *மழறு தேன் மொழியார்கள் நின்னருள் சூடுவார் மனம் வாடி நிற்க எம் குழறு பூவையொடும் கிளியோடுங்குழகேலே* என்றும் * என்னைமார்தன்மபாவமென்னார் ஒரு நான்று தடிபிணக்கே* என்றுஞ் சொல்லி உன்னுடனே கூடோமென்று கதவடைத்து ஊடினவர்களன்றோ நாங்கள்; அக்கொடிய நிலைகளெல்லாம் தொலைந்து நாம் எப்போதும் கூடியிருந்து குளிர்வோமாக. கூடியிருப்போ மென்றாலே போதுமே; அதற்குமேல் குளிர்வோ மென்று ஒன்று கூற வேணுமோ வென்னில்; கூடியிருந்தே கண்வளர்ந்து போதைப் போக்குவதுமுண்டே; அங்ஙனன்றிக்கே "ஸ்திரஶ்ரீதகவொடும ஜய்வதாஸ க ரெண—ஸமீஷி தமதயாஸா நாதிரெவ வஹ்ரஃஸ்ஸ்" என்று சக்ரவர்த்தி திருமகனார் சொன்னபடியே யாகவேணுமென்கை. (27)

## 28. பறைதருமாலை.

* கறவைகள் பின்சென்றி னீற்றடியில் * இறைவா நீ தாராய் பறை யென்றிருப்பதை நோக்கியது இம்மாலைக் குறிப்பு. திருப்பாவையில் பறை யென்னுஞ்சொல் பன்முறையும் வருகிறது. *நாராயணனே நமக்கே பறை தருவானென்று முதற்பாட்டிலேயே கூறிற்று. * கீழ்வானப் பாட்டில் * பாவா யெழுந்திராய் பாடிப் பறைகொண்டு * என்றது. * நோற்றுச் சுவர்க்கப் பாசுரத்தில் * நம்மால் போற்றப் பறை தரும் புண்ணியனென்றது. மற்ற விடங்களிற்காணும் பறையில் காட்டிலும் இங்குக் காணும்பறை விசேஷமுடைத்து. என்ன விசேஷமென்னில், *நம்மால் போற்றப் பறைதரும் புண்ணியனென்றவிது கும்பகர்ண நிஹனனாவான சக்ரவர்த்தி திருமகனைச் சொல்லுகிறது. அப்பெருமாளும் பறை தருவதாகச் சொல்லியிருப்பதால் * மாலே மணிவண்ணா பாசுரத்தில் கோரப்பட்ட பொருள்களினிடையே பேசப்பட்ட 'சாலப்பெரும்பறையே' என்பதற்கு எது பொருளோ அது பொருளாக இருக்கத் தகுதியில்லை. சாலப் பெரும்பறை யென்பது வாத்ய விசேஷமேயாகும். * நாராயணனே நமக்கே பறை தருவான்....இறைவா நீ தாராய் பறை * * அங்கப்பறை கொண்ட வாற்றை * என்னுமிடங்களில் வாத்ய மென்கிற வாத்ய விசேஷம் பொருளாயிருக்க ஔசித்ய லேசமுமில்லை. பறை யென்பதற்கு அர்த்தமாக ப்ரஸித்தமான வஸ்து தொனிக்கும் வஸ்துவாதலால் [ப்ரார்த்யமான வஸ்துவாதலால்] ப்ரார்த்தனையில் கிடைக்கும் பொருளே கொள்ளத்தகும். 'அபேக்ஷிதமான வஸ்து' என்னும் பொருளை விவக்ஷித்தே பறை பறை என்கிறார்கள்; இவர்களுக்கு அபேக்ஷிதமான வஸ்து எது வென்னில்; அஃது அடுத்த பாசுரத்தில் இவர்கள் தம்மாலேயே முக்த கண்டமாக விவரிக்கப்பட்டுள்ளது. அதனை விமர்சித்தாலொழிய பறை தருமாலையின் விவரணம் தேறாது.

* இறைவா நீ தாராய்பறை * என்றவுடனே கண்ணபிரான் முறுவல்பூத்து "ஆய்ச்சிகாள்! முதற்பாட்டே பிடித்து நானும் குறிக்கொண்டு வருகிறேன்; பறை பறை என்கிறீர்கள்; * அன்றிவ்வுலகமளந்தாய் பாசுரத்தில் பல்லாண்டு பாடுகையையே பரமப்ரயோஜனமாகக் காட்டினீர்கள்; அதிலும் * பறை கொள்வானின்று யாம் வந்தோம் * என்றீர்கள்; அதற்கடுத்த பாசுரத்திலும் * உன்னை யருத்தித்து வந்தோம் பறை தருதியாகில் * என்றீர்

கள்; அதற்கடுத்த பாசுரத்தில் பாஞ்சசன்னியம், பறை, பல்லாண்டிசைப்பார், கோல விளக்கு, கொடி, விதானமென்று பலவற்றை விரும்பினீர்கள்; அந்த ஸமுதாயத்திலும் பறை யென்பது சேர்ந்திருக்கிறது. முடிவாக * இறைவா நீ தாராய் பறை யென்கிறீர்கள்; இதனால் உங்களுக்கு விவக்ஷிதமானதை விளம்பியே யாகவேணுமென்றான். அதற்கு ஆய்ச்சிகள் * குற்றேவலெங்களைக் கொள்ளாமற் போகாது * என்றார்கள். அதாவது, கைங்கரியம் செய்கையே எங்களுக்கு விவக்ஷிதமானதென்கை. * கேசவநம்பியைக் கால்பிடிப்பாளென்னுமிப்பேறு எனக்கருள் கண்டாய் * என்றும் * வள்ளல்மாலிருஞ்சோலை மணாளனார் பள்ளி கொள்ளுமிடத்து அடிகொட்டிடக் கொள்ளுமாகில் * என்றும் சொல்லுகிறவர்களாகையாலே திருவடி வருடுகையாகிற கைங்கரியம் செய்து போக வந்தார்கள் போலும் என்று கருதிய கண்ணபிரான் 'ஆய்ச்சிகாள்! அதுவாகில் விவக்ஷிதம், ஆசை தீரத் திருவடி ஸேவை செய்துவிட்டுப் போய் வாருங்கள்' என்று சொல்லித் திருவடியை நீட்டியருளினான்; நப்பின்னைப் பிராட்டியை யழைத்து 'சில ஆய்ச்சிகளின் கையிலே ஆலவட்டமும் கொடு' என்றான். அது கேட்ட ஆயர் சிறுமியர் * இற்றைப்பறை கொள்வானன்று காண் * என்று தொடங்கித் தங்கள் மனத்திலுள்ள பறையின் பொருளை விசதீகரித்தார்கள்.

* இற்றைப் பறை கொள்வானன்று * என்றது—எங்களுடைய பறை இன்று ஒரு நாளோடே முடிந்து போமதன்றுகாண் என்றபடி. பின்னை என்னென்னில்; யாவதாத்மபாவி கைங்கரியமே எங்களுக்கு உத்தேச்யம் என்றார்களாயிற்று. ஆக, * இறைவா நீ தாராய் பறை * என்றதன் உட்கருத்தை நன்கு விவரிப்பது அடுத்த பாசுரமே யாதலால் அது கொண்டு * பறை தருமாலை விவரிக்கலாயிற்று. பறை தருகைக்கு இன்றியமையாத ஹேதுக்கள் இப்பாட்டில் உரைக்கப்பட்டன. எங்ஙனே யென்னில்; நாயனே! நின்னருளை புரிந்திருக்கிற எங்கள் பக்கலில் எடுத்துக் கழிக்கலாம் படியும் சில உபாயங்கள் கிடையாது. 'இரங்கு' என்றும், 'அருள்' என்றும் நாங்கள் அபேக்ஷித்த அருளுக்கு ப்ரதிபந்தகமாக எங்கள் திறத்தில் ஸாதநாம்ச மொன்றுமில்லை யென்று விளக்கமாகக் கூறுகிறார்கள். ஸாத்யோபாயங்களை ஒழித்து ஸித்தோபாயத்தை ஸ்வீகரிக்கு மதிகாரிகளுக்குப் பேற்றுக்குக் கைம்முதலாயிருப்பதொரு நற்கருமமில்லை யென்கையும், மேலும் செய்ய யோக்யதை இல்லை யென்கைக்காகத் தங்களுடைய அபகர்ஷத்தை அநுஸந்திக்கையும், மூலஸுக்ருதமான ஈச்வரனுடைய குணபூர்த்தியை அனுஸந்திக்கையும், ஸம்பந்தத்தை உணருகையும், பூர்வாபராதங்களுக்கு க்ஷாமணம் பண்ணுகையும், உபாய பூர்த்தியை ஈச்வரன் பக்கலிலே உபேயத்தை அபேக்ஷிக்கையுமாகிற இவை ஆறும் அதிகார அங்கங்களாதலால் இப்பாட்டில் இவ்வாறும் வெளியிடப்படுகின்றன.

கீழ் எட்டாம் பாட்டில் "கோதுகலமுடைய பாவாயெழுந்திராய் பாடிப்பறை கொண்டு" என்றும் * கூடாரைவெல்லுஞ் சீர்க்கோவிந்தா! உன்றன்னைப் பாடிப்பறை கொண்டு * என்றும் கூறினவிடங்களை நோக்கினால் இனிமேல் பறை கொள்ளவேண்டாதே ஏற்கெனவே பறை கொண்டுவிட்டதாகத் தெரிய வருகின்றதே யென்று சிலர் திகைப்ப துண்டு; அவ்விடங்களில் பாடுகையாகிற உத்தேச்யத்தைப் பெற்று என்பதே பொருளென்றுணர்க. "சொல்திரியினும் பொருள் திரியா வினைக்குறை" என்ற நன்னூற் சூத்திரத்தின்படி "பறைகொண்டு" என்பதற்கு—பறைகொள்ள என்னும் பொருளும் பொருத்தமே. (28)

# 29 காமங்கள்மாற்றுமாலை

* சிற்றஞ்சிறுகாலேபாசுரத்தி னீற்றடியில் *மற்றைநங்காமங்கள் மாற்றென்றிருப் பதை நோக்கியது இம்மாலைக்குறிப்பு. *மற்றை நங்காமங்கள் மாற்று* என்னும் வாக்கியம் மிகவும் ஸாரமாகக் கொள்ளத்தக்கது; திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தில் மத்யமபதமான நமஸ்ஸானது காகாக்ஷிந்யாயத்தாலே முன்னேயுள்ள ப்ரணவத்திலே அந்வயித்தும், பின்னே யுள்ள *நாராயணாயவில் அந்வயித்தும், தன்னோடே யந்வயித்தும் மூன்று விரோதிகளைக் கழிக் கிறதென்பர். இதனை பட்டர் அஷ்ட ச்லோகியில் *மந்த்ரப்ரஹ்மணி மத்யமேந நமஸா* என்கிற இரண்டாம் ச்லோகத்திலே விவரித்தருளுகிறார். முமுக்ஷுப்படியில் "நமஸ்ஸாலே விரோதியைக் கழிக்கிறது" என்றருளிச் செய்து, "விரோதிதான் மூன்று; ஸ்வரூப விரோதியும் உபாய விரோதியும் ப்ராப்ய விரோதியும்" என்றுமருளிச் செய்து, இந்த விரோதிகள் கழியப்பெற்ற நிலைமையில் பேச்சு எங்ஙனே யிருக்குமென்பதைக் காட்டுமளவில் "ஸ்வரூப விரோதி கழிகையாவது *யானே நீ யென்னுடைமையும் நீயே யென்றிருக்கை; உபாய விரோதி கழிகையாவது *களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேனென் றிருக்கை; ப்ராப்ய விரோதி கழிகையாவது * மற்றை நங்காமங்கள் மாற்றென்றிருக்கை." என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தம். ப்ராப்ய விரோதி கழிந்த நிலைமையிற் பாசுரம் இது வென்று காட்டப்பட்டதாயிற்று. இதைச் சிறிது விவரிப்போம். ப்ராப்யமாவது பலன்; பலனை யநுபவிக்கும் போது நேருகிற விரோதமென்னவென்று தெரிந்துகொள்ள வேணும். பலனை யநுபவிக்கும்போது ஆனந்தம் அவச்யமுண்டாகியே தீரும். அந்த ஆனந்தத்தைத் தன் னுடையதாக நினைத்தல் பெரிய விரோதி. நிலாத்தென்றல் சந்தனம் புஷ்பம் முதலானவை நமக்கு ஒரு உபயோகமின்றிக்கே பிறர்க்கே உபயோகப்பட்டுப் பிறரையே ஆனந்தப்படுத்து கின்றன. தாம் சிறிதும் ஆனந்தம் கொள்வதில்லை. அதுபோலவே பகவானுக்கு நாம் உப யோகப்படுமளவில் அதனால் ஆனந்தப்படுகிறவன் பகவான்தானே யாகவேணும். சேதந லாபம் ஈச்வரனுக்கே பேறு ஆகையாலே பேறு பெற்றவன்தானே ஆனந்திக்கப் ப்ராப்தி யுண்டு. ஆனால் நிலாத்தென்றல் சந்தனம் புஷ்பமென்று த்ருஷ்டாந்தமாகக் காட்டப்பட்ட பொருள்கள் அசேதநமாகையாலே அவற்றுக்கு ஆனந்தமுண்டாக ப்ராப்தியில்லை. நாம் சேதநராகையாலே சைதந்யப்ரயுக்தமாக நேரக்கூடிய ஆனந்தம் எங்ஙனே தவிர்க்கமுடியும்? என்று கேள்வி பிறக்கும். நம்முடைய கைங்கர்யத்தினால் எம்பெருமான் ஆனந்திக்க, அது கண்டு நாம் ஆனந்திக்கக் குறையில்லை. நாம் செய்யும் கைங்கர்யம் ஸாக்ஷாத்தாக நம்மு டைய ஆனந்தத்திற்கு ஹேதுவாகக் கூடாதென்பதே விஷயம். ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்நத்தில் "கதா ஹமைகாந்திக நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்கிற ச்லோக ரத்நத்தி னால் இந்த தத்வார்த்தத்தை யநுஸந்தித்தருளினார். இந்த ச்லோகத்தில் *ப்ரஹர்ஷயிஷ்யாமி* என்பது ஜீவநாடி. இதில் பகவானே! உனக்கு நான் கைங்கரியம் செய்து எப்போது ஆனந் தப்படப்போகிறேன் என்று கூறாமல் 'உன்னை எப்போது ஆனந்தப்படுத்தப்போகிறேன்' என்று சொல்லியிருப்பதானது *மற்றை நங்காமங்கள் மாற்று* என்கிற இப்பாசுரத்தின் பொருளையே [வடிக்கட்டின ஸத்ஸம்ப்ரதாயார்த்தத்தையே] அருளிச்செய்தபடி.

அவ்விடத்து ஸ்தோத்ரபாஷ்யத்தில் *ப்ரஹர்ஷயிஷ்யாமி*யின் ஸ்வாரஸ்யத்தை விளக்கா நின்ற வேதாந்தவாசிரியர் "[illegible]

ஙிதி ஹாவஃ। ஊவஂ ஷாயீந ஷாய-ுகத-ரகவ ஹொகூரகுஹ ஊஹித கெஂகய-ு ஆுாய-ுநா கூதா ஹவதி'' என்றுபணித்தார். சிலவிடங்களில் உகப்பு சேதநநிஷ்டமாகப் பேசப்பட்டாலும் இந்த ஶாஸ்த்ரார்த்தத்துக்கு விரோதமின்றிக்கே அது நிர்வஹிக்கத்தக்கதாகும். த்வயமந்த்ரத்தில் உத்தரவாக்யத்தின் முடிவிலுள்ள நமஸ்ஸுக்குப் பொருள்பணிக்கும் பிள்ளையுலகாசிரியர் ''நம:. கைங்கர்யத்தில் களையறுக்கிறது; களையாவது தனக்கென்னப்பண்ணுமது. .........கைங்கர்ய ப்ரார்த்தநை போலே இப்பதத்தில் ப்ரார்த்தனையும் என்றுமுண்டு; * மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு * என்னுநின்றதிறே.'' என்றருளிச் செய்ததும், அவ்விடத்து வியாக்கியானத்தில் — ''தனக்கென்னப் பண்ணுகையாவது — 'ஹொக்ஷூாஉஹா. ஊ ஹொமொாஉயு' என்கிறபடியே இத்தைத் தன்னுடைய ரஸத்துக்குறுப்பாக நினைத்துப் பண்ணுகை. ஸ்வருகவிகாஸ ஹேதுவாகையாலே இது நமக்கு ஆசுரணீயம் என்கிற ஆபிபத்தியொழிய இதில் ஹொக்த்ருத்வ ஆபிபத்தியும் ஊசீயமென்னும் ஆபிபத்தியும் நடக்குமாகில் அபுருஷார்த்தமாயிறேயிருப்பது. ....சதுர்த்தியில் சொல்லுகிற கைங்கர்ய ஆார்த்தனை காதாசித்கமன்றிக்கே நித்யமாய்ச் செல்லுமாபோலே நம: பதத்தில் சொல்லுகிற கைங்கர்ய விரோதி நிவ்ருத்தி ஆார்த்தனையும் இங்கிருக்குங் காலத்தோடு ஆரவஞூ பூமியில் போன காலத்தோடு வாசியற எல்லாக் காலமும் நடக்கக் கடவதாயிருக்கும். கந்தல் கழிந்த அந்நிலத்திலும் ஸ்வஹோக்த்ருத்வ ஆபிபத்தியாகிற விரோதியின் உசயமுண்டோ வென்ன வருளிச் செய்கிறார் (* மருந்தேநங்கள் போகமகிழ்ச்சிக்கென்னு நின்றதிறே *) என்று. அதாவது, உன்னுடைய அநுபவத்தாலே எங்களுக்குவரும் ஆனந்தத்துக்கு ஸ்வஹோக்த்ருத்வ புத்தியை விளைவித்து ஸ்வரூபத்தை அழியாதபடி ஸாத்மிப்பிக்கும் ஹேஷஜமானவனே! யென்று நித்ய ஸூரிகள் பேசும் பாசுரமாகச் சொல்லா நின்றதிறே யென்கை. ஆக அவ் விஷய வைலக்ஷண்ய ஆுயுக்தமாய் வரும் ஸ்வஹோக்த்ருத்வபுத்தி அங்கும் விளைகையாலே இப் பதத்தில் ப்ரார்த்தனை [நமஸ்ஸிலுள்ள விரோதிநிவ்ருத்தி ஆார்த்தனை] என்று மூண்டென்னுமிடம் ஸித்தம்'' என்று மணவாளமாமுனிகளருளிச் செய்த ஸ்ரீஸூக்திகளும் இங்கே அநுஸந்தேயம். ஆனால் இத்திருப்பாவை வூசவாஞூர்களில் பலர் இச்சுவையறியார்கள். (29)

## 30. திருவருள்மாலை.

* வங்கக் கடல் கடைந்த பாசுரத்தில் * எங்குந் திருவருள் பெற்றின்புறுவரென்றிருப்பது நோக்கியது இம்மாலைக் குறிப்பு. ஆளவந்தார் * எங்குந் திருவருள் பெற்றென்றதை நோக்கியே ''ஶ்ரீ யொ நஹுஂாவிஜமொது நஃ நஃ கா ஜோாவ ஷாஉாஉரதெ ஷஂஹூ தூக்ஷா வெஷவாயஷ நரணாஂ ஷஂஹாவ்ூதெ கஹி-ுஜிக'' என்றருளிச் செய்தார். * பண்டை நாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங் கொண்டு * என்றாழ்வாரும், பிராட்டி புருஷகாரமானலல்லது எம்பெருமான் காரியம் செய்யானகையாலே திருவருள் மிக முக்கியமென்க, திருவரங்கத்தமுதனர் நூற்றந்தாதியில் நூற்றேழு பாசுரங்களினல் எம்பெருமானரைப் போற்றுவதையே பரம புருஷார்த்தமாகக் கொண்டவர் நூற்றெட்டாவது பாசுத்தில் ''பங்கயமாமலர்ப்பாவையைப் போற்றுதும்'' என்று தம்முடைய அபேக்ஷிதஸித்திக்குத் திருவருளையே தஞ்சமாகக் கொண்டாராயிற்று.

இப்பாசுரத்தில் இத் திவ்வியப்பிரபந்தம் கற்பார்க்குப் பலனுரைத்துத் தலைக்கட்டுகிறது. கீழ் ஓங்கியுலகளந்த பாசுரத்தில் * தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி

பெய்து நீங்காத செல்வம் நிறைந்திடுமென்று பலன் சொல்லி யிருப்பதானது கோபிகள் தாங்கள் அனுட்டிக்கும் நோன்பினால் விளையக் கூடிய பலனைச் சொன்னவாறு; இப்பாசுரம் இத்திருப்பாவை கற்றார்க்குப் பலன் சொல்லுகிறது. கீதாசார்யன் *கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசந* என்று ஒரு பலனையும் விருப்பத்தகாதென்று சொல்லியிருக்க, இங்குப் பலனுரைப்பது கூடுமோவென்று சங்கிக்கவேண்டா. பலனை விரும்பக்கூடா தென்று சொன்ன பகவானுக்கு—செய்கிற கார்யம் நிஷ்பலமாய்விடுமென்று திருவுள்ள மன்றே. நாமாக ஒரு பலனை விரும்பினால் க்ஷுத்ர பலனைத்தான் விரும்புவோம்; உயர்ந்த பலனை விரும்ப நமக்குத் தெரியாது; ஆனதுபற்றியே பலனை நீ விரும்பாதே யென்று தெரி வித்தபடி. இங்கு அருளிச் செய்யப்படுகிற பலன் எப்படிப்பட்டதென்று பார்க்கவேணும்; "செங்கண் திருமுகத்துச் செல்வத்திருமாலால் எங்குந் திருவருள் பெற்று இன்புறுவர்" என்று திவ்ய தம்பதிகளினுடைய திவ்ய க்ருபா லாபமேயன்றோ பலனாகச் சொல்லப்பட்டது. இது ஸாக்ஷாத் பிராட்டிதானே யருளிச்செய்த பாசுரமாகையாலே, திருப்பாவை யநுஸந்தானத்தினால் உபய விபூதியிலும் நமக்கு இன்பம் நிஸ்ஸந்தேஹமென்று தேறியிருக்கலாம்.

திருவருள் என்பதற்குத் திருவின் அருள் என்னும் பொருளைவிட, திருவென்பதை அருளுக்கு அடைமொழியாக்கி, திருவடி, திருவாய், திருக்கண், திருக்குளம் இத்யாதிகளிற் போலச் சிறந்தவருள் என்று பொருள் கொள்வது பிரகரணத்திற்கு மிகச்சேரும். முன்னே செல்வத்திருமாலால் என்றிருப்பதால் அருள்செய்கையிலே பிராட்டியின் அந்வயம் ப்ராப்தமே யாயிற்று. ஆகவே ஸ்ரீமந்நாராயணனுடைய திவ்யக்ருபையினால் எங்கும் இன்புறுவர் என்றதாகக் கொள்க. இங்ஙனே நாமெழுதுவதைக்காணும் பிறர் "திருவின் அருளால் என்று பொருள்கொண்டால், பிராட்டிக்கு மோக்ஷப்ரதத்வமில்லையென்கிற ஸ்வகீய ஸித்தாந்தத்திற்கு பாதகமாகுமென்றுகொண்டு இங்ஙனே யோஜித்தபடிபோலும்" என்று (சிலர்) நினைப்பர்கள். கீழே நாமெடுத்துக்காட்டிய "ஶ்ரேயோ நஹ்யரவிந்த........" இத்யாதியான ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியிற் காட்டிலும் இதில் ஒரு விசேஷமில்லைகிடீர். ஐஹிகமாயும் ஆமுஷ்மிகமாயுமுள்ள ஶ்ரேயஸ்ஸுக்கள் பிராட்டியின் அருளில்லாதவன்று பெறமுடியாதென்னுமிடம் ஸர்வஸம்ப்ரதிபந்நம். பிராட்டி புருஷகாரமானாலல்லது ஈச்வரன் காரியம் செய்யானென்னுமிடத்தை ஸகல ஆசாரியர்களும் ஸமகண்டமாகக் கூறியுள்ளார்கள். சதுச்ச்லோகியின் மூன்றாவது சுலோகத்தின் பாஷ்யத்தில் தேசிகனருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்தி— "மோக்ஷப்ரதே பகவதி ஸாபராதாநாம் புருஷகாரதயா வர்த்திஷ்யத இதி ஸர்வஸம்மதம்" என்பதன்றோ. இந்த ஸ்ரீஸூக்தியின் முன்னிலையில் நவீனர்களின் நூதனக்கொள்கை இரவியைக்கண்ட இருள்போல் மறையுமன்றோ. "எம்பெருமான் தான் மோக்ஷமளிப்பவன்; புருஷகார க்ருத்யம் செய்பவளாகமட்டும் பிராட்டியிராநின்றாள் என்பதுதான் ஸர்வஸம்மதமான ஸித்தாந்தம் என்பதன்றோ மேலேகுறித்த வடமொழி வாக்கியத்தின் நிர்விவாதமான பொருள். அதே யிடத்தில் ஒரு சுலோகமுமிட்டருளுகிறார் தேசிகன்; *ஸ்வதந்த்ர ஸர்வேச: ஸ்வமதி பலதாநே ஸுக்ருதிநாம் ஸ்வயம் ஶ்ரீ: நிக்ரஹாவாரணம் கார்யே ஸம்ரக்ஷண அநுக்ரஹே* இதி. இந்த சுலோகத்தின் பொருளாவது, அவரவர்களுடைய கருமங்களுக்குத் தக்கபடி பலன் கொடுப்பவன் பகவானேயாவன்; அங்குப்பிராட்டி இருவகையான காரியஞ்செய்து நிற்பள்; அப்பெருமான் நிக்ரஹோந்முகனாயிருக்கும்போது அந்த நிக்ரஹேச்சையைத் தவிர்க்க முற்படுகையொன்று; அநுக்ரஹாபிமுகனாகும்போது அவ்வநுக்ரஹத்தை மேன்மேலும் பெருகச் செய்வது

மற்றொன்று. ஆக இவ்விரண்டு க்ருத்யங்களே பிராட்டிக்குள்ளனவென்று சொல்லி வைத்திருக்க இதில் பிணக்கு வளர்வது பெருவியப்பே. தேசிகனுடைய ஸம்ஸ்க்ருத வார்த்தைகளை யெடுத்துக் காட்டி அவற்றை நாம் தமிழில் மொழி பெயர்த்துக் காட்டும் ஆயாஸமேதுக்கு? அவர் தமிழிலேயே ஸ்பஷ்டமாகப் பணித்திருப்பது காணலாமே. அவருடைய சிறு ரஹஸ்யங்களில் ரஹஸ்ய ரத்நாவலி யென்பது பதின்மூன்றாவது ரஹஸ்யம். இது முப்பது வார்த்தைகள் கொண்டது. இதில் நான்காவது வார்த்தை—"ஸர்வ ஸ்வாமினியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்ம சாரிணியான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும், அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்." என்பது. இதற்கடுத்த ரஹஸ்யம் ரஹஸ்ய ரத்நாவளீ ஹ்ருதயமென்பது. அது ரத்நாவளீ வார்த்தைகளுக்கு அடைவே விவரணம் காட்டுவது. அதையுங் கண்டு தெளிவது.

ஸாரமான வார்த்தையால் தலைக்கட்டுகிறோம். புருஷகாரத்வமும் உபாயத்வமும் ஏகாச்ரயத்தில் கூடியிருக்க முடியாது. பிராட்டிதானே முக்திஸாம்ராஜ்ய மளிக்க வல்லவளாயிருந்தால் அநாயாஸமாகத் தானே கொடுத்து வாழ்விக்க என்ன தடை; ஈச்வரனை எம்பெருமான் பக்கலிலே இவள் மன்றாடுவது எதற்காக? த்வாதசியன்று ஸூர்ய க்ரஹணம் நேர்ந்தால் பாரணைக்கு ப்ராயச்சித்தமா? உபவாஸவ்யாப்தமான உபவாஸத்திற்கு ப்ராயச்சித்தமா? என்று ஒருவர் [illegible] கேட்க, த்வாதசியாகையாலே பாரணைக்குத் தான் ப்ராபல்யமென்று எங்கள் பிதாமஹர் பிரபல விசாரஞ் செய்து ஸஞ்சிகை யெழுதி வைத்திருக்கிறார் என்று சொல்லுவர் ஒரு பெரிய மேதாவி. த்வாதசியன்று க்ரஹணம் நேருவதெப்படி யென்கிற விசாரத்தில் அந்தோ! புத்தி செல்லுவதில்லை. அதுபோலவே இவ்விஷயத்திலும் நியமேந [illegible]ங்களான புருஷகாரத்வ உபாயத்வங்களுக்கு ஸாமாநாதிகரண்யம் கூடுவதெங்ஙனே? என்று இந்த மிகச் சிறு விஷயத்தையும் ஆராயகில்லாது வாத விவாதங்களை வளர்த்துகின்றார்களென்றால் இதனிலும் மிக்க வியப்பு வையகத்திலுண்டோ? அவிசாரித ரமணீயங்களான துர்வாதங்கள் நீங்கத் திருவருள் வேண்டியதே. அந்தத் திருவருளின் ப்ரபாவத்தினால் தலைக்கட்டியது [illegible] ॥

## — நிகமனம் —

மாலைக் குறிப்பு இட்டவர்கள் திருவருள் மாலையிலே நிகமனஞ் செய்கையாலே இவர்கள் பெற்ற திருவருளைச் சிறிது விளம்ப விரும்புகிறோம். நம்முடைய இந்நூல் முகமாக இவர்கள் இத்தகைய விசேஷார்த்த நிதிகளைப் பெற்றதுவே சிறந்த திருவருளாகும். "ஆ தகஷ்ர [illegible] வயஃகணாநு யாஅதெ ஜஹயா விவாஹயா । ஹொவி [illegible] விஸ்மவ ஹவா" என்றான் பண்டிதராஜன். திருப்பாவை ஸேவையை நிர்வஹிக்கப்புறப்பட்டவர்கள் ஏழேழு நிமேஷங்களுக்கு விஷயம் விரும்பினார்கள். எத்தனைகால மெடுத்தளவ்வளவு அநுபவித்தாலும் கொள்ளமாளாவின்ப வெள்ளமான இந்த மஹாநிதி உலகுக்கெல்லாம் கிடைத்ததானது உண்மையில் மிகச் சிறந்த திருவருளே. ... ... (30)

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

**சங்கத்தமிழ்மாலை முப்பது முற்றிற்று**

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஒரு முக்கிய விஜ்ஞாபனம்

பல்லாவரம் ராஜாஜீ நகரத்தில் வாழும் ஒரு பெரியவர் (ஸ்ரீவானமாமலை ஸ்வாமி திருவடிகள்) நமக்கெழுதிய கடிதம் 14—2—62 தேதியாகிய இன்று கிடைத்தது. அக்கடிதத்தை அப்படியே அச்சிடவேணுமென்று தோன்றினபடியால் அது இங்கு வெளியிடப்படுகிறது ;—

" ஸ்ரீமத் P.B A. ஸ்வாமி ஸன்னிதியில் தாஸன் தெண்டனிட்ட விண்ணப்பம். ..........அடியேன் 7—1—62 ஞாயிற்றுக்கிழமையன்று முத்தியால்பேட்டையில் நடந்த ஸதஸ்ஸுக்குப் போயிருந்தேன். ஸதஸ்ஸுக்கு ப்ரவர்த்தகர்களான சிலர் எனக்கு ஆப்தர்களாகையால் அவர்களோடு வார்த்தையாடுகையில், இந்த ஸதஸ்ஸில் உபந்யாஸகர்களின் நாமாவளியில் ஸ்வாமியினுடைய திருநாமம் ஏன் இல்லை? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் சொன்னார்கள்—அவர் உபந்யஸித்தால் திருப்பாவையில் தென்னாசார்ய ஸம்பிரதாயந்தான் ஒவ்வொரு பாட்டிலும் ஸ்தாபிதமாயிருக்கிறதென்றும், தேசிக ஸ்ரீஸூக்தியும் அதற்கே அநுகுணமாயிருக்கிறதென்றும் பேசுகிறார்; ஆனதால் அவரை அழைக்கவில்லை என்றார்கள். அதன்மேல் நான் கேட்டேன்; உங்களுடைய ஸம்பிரதாயத் தலைவர்களான பண்டிதர்கள் அதிக லக்க மிருக்கிறார்களே, அவர்களெல்லாரும் தங்களுடைய ஸம்பிரதாயார்த்தமே திருப்பாவையில் எழுத்துத்தோறும் பிரகாசிக்கிறதென்று தேசிக ஸூக்திகளைக் கொண்டே உபந்யஸிக்கலாமே என்றேன். அதற்குப்போதுமான சரக்கு இல்லையாகையால்தான்........என்று வழவழவென்று இழுப்பாக முடித்துவிட்டார்.

எப்படியும் வந்துவிட்டோம்; அவரவர்கள் பேசுவதைக் கேட்டுப் போவோமென்று இருந்து கேட்டேன். எனக்கு ஞாபகமுள்ளவரையில் எழுதுகிறேன். பத்திரிகையில் அச்சிடலாமானால் அச்சிடுவது.

(அந்தப் பெரியவர் எழுதியனுப்பியவை)

பாரோர் புகழ்மாலை—இதற்கு அர்த்தம் சொன்னார்; பார்—இதோ என் கையிலிருக்கும் மாலையைப் பார் என்கிறாள் மாலை சூடிக் கொடுத்தவள். இது எப்படிப் பட்ட மாலை தெரியுமா? ஓர் புகழ்மாலை—ஒப்பற்ற புகழையுடைய மாலை—சாமந்தி மாலையன்று, நஞ்சாவட்டைமாலையன்று, ரோஜாமாலையப்பா. மல்லிகைமாலையில் பரிமளமிருந்தாலும் ரோஜாமாலையின் அழகு வருமா அதற்கு. சில திவ்யதேசங்களில் ரோஜாமாலை சாத்துவதில்லையாம். அதை அந்தபெருமாளுடைய தௌர்ப்பாக்யமென்றே சொல்லவேணும்.

செல்வமாலை—இதற்கு அர்த்தம் சொன்னார்; ஆங்காங்கு உத்ஸவமூர்த்திகளுக்குத்தான் மாலை சாத்துவதுண்டு. மூலமூர்த்திக்கு கதாசித் க்வசித் சாத்துவர்கள். செல்வருக்கு மாலை சாத்த ப்ரஸக்தியே கிடையாது. ஆகவே செல்வமாலையென்பதே சேராது. மனதில் என்ன வைத்துக்கொண்டு இப்படி மகுடமிட்டார்களோ தெரியவில்லை.

குளிர்மாலை—இதற்கு ஒருவர் அர்த்தம் சொன்னார்; இப்போது குளிர் மிகவும் அதிகமாகத்தானிருக்கிறது. எத்தனை கம்பளி போர்த்துக்கொண்டாலும் மாலை வேளையிலும் பின் மாலைவேளையிலும் மட்டுமன்றிக்கே பகலிலுங்கூட பொறுக்க முடியாத குளிர்தான். இது அஷ்டக்ரஹயோகத்தின் காரியமென்கிறார்கள். மெய்யாகத்தானிருக்கும்.

**அருள்மாலை**—இதற்கு ஒருவர் அர்த்தம் சொன்னார்; திவ்ய தேசங்களில் பெருமாள்களுக்கு பூஸரமும் சாத்துவதுண்டு, மாலையும் சாத்துவதுண்டு; மாலையை உபயக்காரர்களுக்கு அருள்செய்வர் பெருமாள். இதுதான் அருள்மாலை. அருள் செய்யப்படுகிற மாலை—அருள்மாலை.

**பொருள்மாலை**—இதற்கு ஒருவர் அர்த்தம் சொன்னார்; பொருளென்றால் ரூபாய்; ரூபாய்களை மாலைமாலையாகக் கட்டி ஆண்டாளுக்குச் சாத்தியிருந்தார்களாம். அப்போது பவுன் துர்லபமாயிருந்தகாலம். இப்போது பவுன்களையே மாலையாகக் கட்டிச் சாத்தியிருப்பதாகக் கேள்வி. பவுனையும் பொருளென்று சொல்லலாம்.

**அறிவு மாலை**—இதற்கு ஒருவர் அர்த்தம் சொன்னார். மாலை என்பதற்குப் பின் மாலையென்றுதான் அர்த்தம் கொள்ளவேணும். பின் மாலை வேளையில்தான் அறிவு கொழுந்துவிடுவதுவழக்கம். மாலை வேளையில் தமோவ்யாப்தியினாலே அறிவு மங்கிப் போகும்.

**கள்ளம் தவிர்மாலை**— இதற்கு ஒருவர் அர்த்தம் சொன்னார்; நாம் இங்கே கூட்டங்கூடி கள்ளம் தவிர வேணுமென்று சொன்னாலும் கண்ணபிரானால் அது தவிரப் போகாது. அவனுடைய களவு ஏடு ஏடாக ஏறிக்கிடக்கிறதல்லவோ ? வெண்ணெய் களவு, பால் களவு, நெய் களவு, தயிர்க் களவு, பெண் களவு - - - இப்படி எத்தனை யோ களவுகள். ஆனால் மோர்க்களவு ஒன்று தான் கிடையாது. மோர் வேண்டியிருந்தாலும் தயிரை மோராக்கிக் கொள்ளலாமன்றோ.

**பாடல் மாலை**— இதற்கொருவர் பொருள் சொன்னார்; எங்கும் பாட்டுக் கச்சேரி மாலைப் பொழுதில்தான் வைக்கப்படும். காலையிலோ பகலிலோ அது வைப்பதில்லை. வைத்தாலும் ரஸிக்காது. இரவில் உண்டேயெனில், மாலையென்றது இரவுக்கு ருப லக்ஷணம்.

**உறங்கா மாலை**— இதற்கு ஒருவர் அர்த்தம் சொன்னார்; உறங்குவது என்பது சேதநர்களுக்குத் தவிர்க்க முடியாத ஸஹஜ குணம். உறங்காமலிருக்க ஒருவராலும் முடியாது. ஆனால் பிரபலமான கடன் பட்டவர்களுக்கும் புத்ரதாரக்ருஹக்ஷேத்ரங்களைப் பறிகொடுத்தவர்களுக்கும் உறக்கம் வருவது அரிது.

* * * *

இப்படி அவரவர்கள் 4 நிமிஷத்திலும் 5 நிமிஷத்திலும் பேசி முடித்தார்கள். இதற்கு மேல் ஒரு பெரியவர் எழுந்து, ஸ்ரீவில்லிபுத்தூரைப்பற்றியோ ஆண்டாளைப் பற்றியோ அவரவர்கள் 3 நிமிஷங்களுக்கு மேற்படாமல் ரஸமாகப் பேசவேணுமென்று கேட்டுக்கொண்டார். உடனே அதைப்பற்றியும் பேசினார்கள். அதுவும் இங்குத் தெரிவிக்கப்படுகிறது.

1. ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்தவள். ஸ்ரீ வில்லிபுத்தூரென்பது முற்காலத்தில் மிகச் சிறிய வூராயிருந்தது. இப்போது நாளடைவில் பெரிய நகரமாயிற்றென்று கேள்வி. வீதிகள் வெகு அழகாயிருக்கும். ஊரின் தோற்றமும் வெகு ரமணீயம்.

2. கோதை பிறந்த வூரான புதுவைக்குச் செல்லுவது முற்காலத்தில் வெகு சிரமமாயிருந்து. சாத்தூர் ஸ்டேஷனில் இறங்கி 24 மைல் மாட்டு வண்டியில் செல்ல வேண்டிய அருமையிருந்தது. இப்போது ஸ்ரீவில்லிபுத்தூரென்கிற ஸ்டேஷனே ஏற்பட்டுவிட்டது. ஆனாலும் ஸ்டேஷனிலிருந்து ஊர் கொஞ்சம் தூரமாகவேயுள்ளது.

3. ஸ்ரீவில்லிபுத்தூரை முற்காலத்தில் திருநெல்வேலி ஜில்லாவில் சேர்த்திருந்தார்கள்; இப்போது ராமநாதபுரம் ஜில்லாவில் சேர்த்திருக்கிறார்கள். திருப்புல்லாணிகூட ராமனாட் ஜில்லாவில் சேர்ந்ததுதான். ஆனால் திருப்புல்லாணிக்கு ஸ்டேஷன் கிடையாது.

4. ஸ்ரீவில்லிபுத்தூரைச் சுற்றி அனேக அக்ரஹாரங்கள் இருக்கின்றன. அவற்றின் பெயர்கள் விசித்திரமாயிருக்கும். காரிசாத்தான், அச்சந்தவிழ்த்தான், வத்தராயிருப்பு, ரகுகுலராமன் - - - என்றிப்படி வேடிக்கையாயிருக்கும்.

5. ஸ்ரீவில்லிபுத்தூர் பக்கத்திலே மல்லியென்று ஒரு ஊர்; ஆண்டாளை மல்லி நாட்டுத் தலைவியென்று சொல்லுவார்கள். அவ்வூரில் புழுக்கப்பட்டையென்று விற்பனையாகிறது. அது வெகு வாசனையாயிருக்கும். என் தாயார் ஒரு தடவை அதை வாங்கிக்கொண்டுவந்தாள். நல்ல பரிமளம்.

6. ஸ்ரீவில்லிபுத்தூரில் திருமுக்குள மென்று ஒரு பெரிய குளமுண்டு. தீர்த்தம் வெகு ருசியாயிருக்கும். ஆனால் அக்குளம் சில ஸமயம் வற்றிப்போவதுண்டு. அப்படிப்பட்ட ஸமயத்தில் வெகு சிரமமாயிருக்கும்.

7. ஸ்ரீவில்லிபுத்தூரில் நாடக சாலைத் தெருவென்றும் வாழைக்குளத் தெருவென்றும் சில தெருவுகளுண்டு. இப்போது நாடகமும் கிடையாது, வாழையும் கிடையாது. வாழைக்குளமும் கிடையாதாம். ஏதோ பேர் வைத்துவிட்டார்கள். கோதை வீதி, ஆழ்வார் வீதி என்று வைக்கலாகாதா ?

8. ஆண்டாள் தன் கூந்தலில் பூமாலையைச் சூட்டிக்கொண்டு அழகு பார்த்த கிணறு என்று ஒரு கிணற்றைக் காட்டுகிறார்கள். அது ரெம்ப நன்றாயிருக்கிறது. அந்த ஜலத்தில் பார்த்தால் கண்ணாடியில் பார்த்துக்கொள்வதுபோலவே யிருக்கிறது.

9. ஸ்ரீவில்லிபுத்தூர் வழியாகப் போனால் தென்காசி யென்று ஒரிடம் வரும். அங்கிருந்துபோனால் குற்றாலம் நீர் வீழ்ச்சி வெகு ரமணீயமான இடம். ஸீஸன் டயத்தில் பல பெரிய மனிதர்கள் வந்து தங்குகிறார்களங்கு. அடுத்த வருஷத்தில் நானும் போகலா மென்றிருக்கிறேன்.

10. ஸ்ரீவில்லிபுத்தூரருகில் ராஜபாளையமென்று ஒரு ஊர். அங்கே என் தம்பி ஓவர்ஸியராயிருக்கிறான். அவன் அடிக்கடி ஸைகலில் ஸ்ரீவில்லிபுத்தூர் போய் வருவன். ஒரு தடவை ஸைகலிலிருந்து விழுந்து வெகு சிரமப்பட்டான். அவ்வூரில் வைத்யசாலை வஸதியுமுண்டு.

11. ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் போகவேணுமானல் மதுரை தாண்டியே போக வேண்டும். வழியில் விருதுபட்டியென்கிற வொரு ஊர் இருந்தது. இப்போது அது காணவில்லை. அதுதான் விருதுநகரென்று மாறிவிட்டதென்கிறார்கள். இதுபோல் கோயில்பட்டியென்பது கோயில்நகரென்று ஏன் மாறவில்லையென்று கேட்டேன். வாய்திறப்பாரில்லை. கேட்டகேள்விக்கு பதில் ஏது ?

12. ஸ்ரீவில்லிபுத்தூரில் காணும் இரட்டை மாட்டு வண்டிகள்போல், உறுதியான வண்டிகள் நம்மபக்கத்தில் கிடையாது. ஒவ்வொரு வண்டியும் ஆயிரம் இரண்டாயிரம் தாளும். அதிலுட்கார்ந்தால் சிரமமே தெரியாது. நம்ம பக்கத்துவண்டிகளில் உட்கார்ந்து ஒரு பர்லாங்கு சென்றாலும் போரும் போருமென்றாய்விடுகிறது. ஸ்ரீவில்லிபுத்தூர் வண்டிகளில் அப்படியாகாதது ஆண்டாள் கடாக்ஷந்தான். ஏனென்றால், கள்ளச் சகடம் கலக்கியக்காலோச்சி யென்றும் பொன்றச் சகட

முதைத்தாய் புகழ் போற்றி யென்றும் ஆண்டாள் சகடத்தைப்பற்றிப் பேசினுளன்ரே. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "தளர்ந்தும் முறிந்தும் சகடவசுரர்" என்று சகடத்தைப்பற்றிப்பேசினபடியாலே திருநெல்வேலி ஜில்லாவிலும் வண்டிகள் நன்ருயிருக்கின்றன.

முடிவாக ஒரு விண்ணப்பம் செய்து நிற்கிறேன். தேவரீர் 1955 ஆம் வருஷத்தில் ஒரு அட்வொகேட்டுக்கு மறுப்பாக எழுதி வெளியிட்டிருந்த வரதன் ஸன்னிதி வரலாறு என்னும் புத்தகத்தில் முதலத்யாயத்தில் கீழ்க்கண்ட விஷயங்களை அடியேன் அடிக்கடி பார்த்துப்பார்த்துச் சிரிப்பதுண்டு. அவற்றை இங்கே உதாஹரிக்கிறேன்;—

"ப்ரஸ்தாவித்த அட்வகேட்டின் சுவடியில் உண்மையான விஷயங்கள் பல விடுபட்டும், உண்மைக்குமாருன விஷயங்கள் பல பல புகுத்தப்பட்டு மிருக்கின்றன. லோகாபிராமமாக எழுதிவருகையில் "இக்காஞ்சிமாநகர் சென்னைக்குத் தென்மேற்காய் 45 மைல் தூரத்திலுள்ளது; ஸதரன் ரைல்வேயில் செங்கற்பட்டு-அரக்கோணம் கிளைப்பிரிவில் அதன் நடுவேயுள்ளது. காஞ்சீபுரம் ரைல்வேஸ்டேஷன் பெரிய காஞ்சீபுரத்திற்குச் சமீபமானது. இது செங்கற்பட்டு ஜில்லாவைச் சேர்ந்தது. இங்கே பஸ்ஸுகள் ஏராளம். கடைகள் கடை வீதிகள் விசேஷம். நெசவுத் தொழில்கள் அபாரம்" "இக்கோவில் கோபுரம் மிகவும் உயரமானது; மேலண்டை கோபுரத்தைவிட கீழண்டை கோபுரம் அதிகவுயரம்; வெகு தூரத்திலிருந்து பார்த்தாலும் கோபுரம் கண்ணுக்குத் தெரியும்" என்றிப்படி எழுதியுள்ளவை சிறிதும் ஆக்ஷேபிக்கத் தகாதவை. இவ்வண்ணமாகவே 100, 200 பக்கங்களும் எழுதிக்கொண்டே போகலாம். அதனல் நூலின் கௌரவத்திற்குச் சிறிதும் ஹானியில்லாமலேயிருக்கும். இந்த அபூர்வார்த்த ப்ரகாசனங்களோடு நின்றிருந்தால் மிகவழகியதே. உலகில் சிலர் ராமாயணம் சொல்லுகிறேனென்று ஆரம்பித்து வாய்போனபடி யதேஷ்டமாக அபார்த்தங்களை யெல்லாம் கலந்து பொழிவதுண்டு; சிலரோவென்னில், உட்பொருள்களில் பிரவேசியாமல் "ராமாயணம் மிகவுயர்ந்தநூல்; இதை த்ரிமதஸ்தர்களும் கொண்டாடுகிருர்கள்; இதற்கு த்ரிமதஸ்தர்களும் வியாக்கியானங்கள் செய்திருக்கிருர்கள். இது பல லிபிகளில் பலதடவை அச்சிடப்பட்டிருக்கிறது. இதற்குப் பல பாஷைகளில் மொழிபெயர்ப்புகள் தோன்றியிருக்கின்றன." என்றிப்படி மணிக்கணக்காகப் பேசிக்கொண்டு போவதுண்டு. "அபார்த்தங்கள் சொல்லி அனர்த்தத்தை விளைப்பதிற் காட்டிலும் இங்ஙனே பேசிக்கொண்டு போவது தேவலை" என்று அவ்வுபந்யாஸங்களை மஹான்கள் கொண்டாடுவதுண்டு. அவ்வண்ணமாகவே வரலாற்று நூலெழுதப்புகுந்த அட்வகேட்டும் காஞ்சீபுரத்தின் அகல நீளங்களை வருணிப்பது, கடைவீதிகளின் காட்சிகளை விவரிப்பது, ஸன்னிதியில் நூற்றுக்கால் மண்டபம் முதலானவற்றிலுள்ள சிற்பங்களின் சிறப்புக்களைச் செப்புவது, தேவப்பெருமாளுக்கு உத்ஸவங்கள் நடக்கிறவிதம் வெகு ஆச்சரியம், மிகமிகவற்புதம், இப்படி எங்குமே ஸேவித்ததில்லையென்று கண்ணீர்மழை பொழிந்து எழுதுவது; ஆக இப்படிப்பட்ட தொண்டு செய்வதோடு நின்றிருந்தால் உண்மையில் மிகமிக மெச்சும்படியாகவே யிருக்கும். புத்தகமும் விசேஷமாக விற்பனையாகும்." என்று தேவரீர் எழுதியிருக்கிறதல்லவா? இதே ரீதியில் திருப்பாவை ஸதஸ்ஸில் திருப்பாவையினுள்ளே புகாமல் லோகாபிராமமாகச் செய்த பிரசங்கங்கள் ஒருவருடைய அருவருப்புக்கும் இலக்காகாமல் விசேஷமாக நகைச்சுவைக்கு இலக்காயிருந்ததுபற்றி யாவரும் கொண்டாடிப் பேசும்படியாகவே யிருந்தது.

தாஸன். * * * * * *

14—2—62

புல்லாவரம்,